கழக வெளியீடு—கக

உ

திருச்சிற்றம்பலம்

# முருகன் புகழ் மாலை

*

முருகன் றிருவருள் –
பெருகநின் றருள்வது

*

: திருநெல்வேலி, தென்னிந்திய :
: சைவ சித்தாந்த :
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி :: சென்னை

# பொருளடக்கம்

# பதிப்புரை

முருக வழிபாடுடையார் உச்சிமேற் கொளும் நக்கீரனா ரருளிய 'திருமுருகாற்றுப்படை' என்னும் அருமந்த நூலை முதற்கண் சீர் முதலிய பிரித்துப் பிழையற அழகுற அச்சிட்டனம். அதனமைப் பினையும், அச்சுப்பொறிப்பினையுங் கண்ட அன்பர் பலர், 'இதுபோல முருக னருட் பனுவல்களை யெல்லாந் திரட்டி ஒரு நூலாக வெளியிடுமாறு' எங்களைக் கேட்க, அதற்கிணங்கி முருகப் பெருமானது தனி முதற் றன்மையினை விளக்கும் அருட்பனுவல்களை யும், அரிய புராணங்கள், திருப்புகழ், பிள்ளைத்தமிழ், திருவருட்பா, முதலியவற்றினின்றும் சொற்சுவை, பொருட்சுவை, பத்திச்சுவை மலிந்த செழும் பாடல் களையுந் திரட்டி 'முருகன் புகழ்மாலை' என்னும் பெயர் தந்து இந் நூலை வெளியிடுகின்றோம். முருகப் பெரு மானை வழிபடுங்காலத்து அவ்விறைவனை உளங் கரையப் போற்றுதற்கும், நாடோறும் ஓதி வழிபாடு (பாராயணஞ்) செய்வதற்கும், அப்பெருமான் றிருவடி யன்புப்பயிர் வளர்த்தற்கும் இந் நூல் பெரிதும் பயன்படு மெனக் கருதுகின்றோம்.

கந்தரனுபூதியில் ஐம்பத்தொரு பாட்டுக்களுக்கு மேற்பட்டனவும், திருவகுப்பில் பதினெண் வகுப்புக் களுக்கு மேற்பட்டனவுமான பாட்டுக்கள் அருணகிரி

*நாதர் உரையல்லவென்று பலர் கூறுப. ஆயினும், அவை இப்போது வெளிவந்துள்ள சில பதிப்புக்களிற் காணப்படுவது பற்றி யாமும் இப்பதிப்பிற் சேர்க்கலாயினேம்.*

*இந் நூலின்கண் சேர்த்திருக்கும் 'முருகப் பெருமான் கடவுட்டன்மை' என்னுங் கட்டுரையினை அன்பு கூர்ந்து எழுதியுதவிய திருநெல்வேலி இந்து கலாசாலைத் தமிழாசிரியர் திருவாளர் வி. சிதம்பர ராமலிங்க பிள்ளையவர்களுக்கும், முருக னருட் பனுவல்களருளிய ஆசிரியர்கள் வரலாற்றுச் சுருக்க முதலியவற்றைப் பார்வையிட்டுதவிய சென்னை மருத்துவாசிரியரும், தமிழ்ப் புலவருமாகிய திருவாளர் மா. வடிவேலு முதலியாரவர்களுக்கும் நன்றிபாராட்டற் கடப்பாடுடையேம்.*

இரத்தாட்சி,
ஆனி, 31.

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக்**
**கழகத்தார்.**



திருச்சிற்றம்பலம்

# முருகப்பெருமான் கடவுட்டன்மை

முருகப்பெருமானது கடவுட்டன்மையை அறியாதார் சைவசமயத்தினருள் யாருமில்லை. அப் பெருமானது திருப்பெயர்கள் பலவற்றுள் 'கலியுகவரதர்' என்பதும் ஒன்று. அதனால் தீமைமிக்க இக் கலியுகத்தில் வீடென்ப தொன்று உண்டென்னு மறிவும், அதனை யடைதற்குரிய கருவிகளைச் செய்தலில் ஆற்றலும், அதனை யடைதல்வேண்டு மென்னுங் காதலு மில்லாதவரும் முருகப்பெருமானை வழிபட்டுத் தாந்தாம் விரும்பிய இம்மை மறுமைப் பயன்களை யடைகின்றாரென்பது வெளிப்படையான தொன்று. அப் பெருமானது புகழ் வேதாகமங்களிலும், புராண இதிகாசங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. அத்தகைய மகிமையை நம்மவர் அறிவாராயின் அவர்கட்கு அப்பெருமானிடத்து மெய்யன்புமுறுகி வளரும். ஆதலின், வாக்கு மனங்கழிய நிற்கும் அப்பெருமானது அளவிறந்த அருட் செயல்களிற் சில இங்கே கூறப்படுகின்றன.

முருகப்பெருமான் சிவகுமாரரென்பது வெளிப்படை. சாமவேதம் இப்பெருமானை "ஆமந்த்ரைரிந்த்ர ஹரிபிராயோவிச்வாஸு ஹவ்யம் ப்ரஸேநாநி"

என்னும் வர்க்கத்திற் றுதிக்கின்றது. இதனை ஸ்ரீ அரதத்தாசாரிய சுவாமிகள் சுருதிசூக்திமாலை யெனப் படும் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் "ஸ்கந்தம் விநாயக முபாவபி தே குமாரௌ ஸர்வைர் குணை: பிதரமேவ நிதர்சயந்தௌ ஸாமோபகாய முபகாயம் ருசாம் கணேஷு ஸம்ப்ரீணயந்தி சிவ ஸாமவிதௌ யதோக்தம்" (குணங்களெல்லாவற்றானும் தந்தை யாகிய சிவபெருமானோடு ஒப்புமையுடைய விநாயகக் கடவுள் சுப்பிரமணியக் கடவுளென்னுந் திருக்குமார ரிருவருஞ் சாமவேதத்தாற் றுதிக்கப் படுகின்றனர்) என்றருளிச் செய்திருக்கின்றனர். நாராயணோபநிட தத்திலே 'தத்புருஷாய வித்மஹே மஹாஸேநாய தீமஹி: தந்ந: ஷண்முக: ப்ரசோதயாத்' என முருகப் பெருமானது காயத்திரி மந்திரம் கூறப்பட்டிருக் கின்றது. சிவாகமங்களில் இப் பெருமானை வழிபடும் முறை விரித்துக் கூறப்பட்டிருக்கின்றது. வாதுளாகமம் இப் பெருமான் மகா சிருஷ்டி காலத்திலே மகேச்சுரருடைய மார்பினின்று தோன்றி யருளினா ரெனக் கூறுகின்றது. காஞ்சிப்புராணத்தில் 'எக் கலைக்கும் பூதங்க ளெவற்றினுக்கும் பிரமனுக்கு மீச னென்னத், தக்கமுதல் பரப்பிரமஞ் சதாசிவனே மெனவேதஞ் சாற்று மல்லான், முக்கனல்சூழ் வேள் வியிற்சுப் பிரமணிய னேமெனவு முக்காற் கூறும்' என்பது கூறப்பட்டது.

சிவபெருமான் தத்துவங்க ளனைத்தையுங் கடந்த முழுமுதற் கடவுள். "அவரது எல்லாத் திருமேனியும் நூற்றுப்பதினெட்டு உருத்திரர் வடிவும் வித்தியே சுரர் வடிவும் போலச் சிந்திக்கப்படும். பிரமா விட்டுணு சரீரம் பிராகிருதமாகலானும் முன் பரமசிவ னநுக்கிரகம் இல்லாமையானும் இவர்கள் வடிவம்

போலப் பரமசிவனைச் சிந்திக்கலாகாது. பிரமவிட்டுணுக்கள் பதம் பசுத்தானம் உருத்திரர் பதமிரண்டும் பதித்தானம்" எனச் சர்வான்மசம்புசிவாசாரியர் சித்தாந்தப் பிரகாசிகையில் கூறுகின்றார். உருத்திரபதமிரண்டாவன ஸ்ரீகண்டருத்திரபதமும் அனந்தேசர் பதமுமாம். 'சீகண்டருத்திரர்க் குரிய வடிவங்களும் பெயர்களுந்தொழில்களும் முதல்வனுக்கும் ஒப்ப வுளவென்பது வாயுசங்கிதையுட் கூறப்படுதலின், ஈண்டுக் கூறியனவெல்லாம் முதல்வனுக் குரியனவேயாமெனக்கொள்க எனச் சிவஞானசுவாமிகள் சிவஞான சித்தியாருரையில் அருளிச் செய்திருக்கிறார்கள். இவற்றால் முருகப்பெருமான் மகேச்சுரருடைய மார்பினின்று தோன்றியருளினாரென்று வாதுளாகமங் கூறுவதும், ஸ்ரீகண்டருத்திரருடைய நெற்றிக்கண்களினின்றும் தோன்றியருளினாரென்று புராணங்கள் கூறுவதும், அப் பெருமான் சிவகுமாரரே யாவரென்பதும் பொருந்துமாறு அறியப்படும்.

முருகப்பெருமானுடைய புகழ் நிறைந்த வரலாறுகள் பல. அவற்றுளெல்லாஞ் சிறந்து விளங்குவது அப் பெருமான் தேவர்கட்கு இடையூறு பல செய்த சூரபதுமன் முதலிய அசுரர்களைக் கொன்று தேவர்களை வாழ்வித்துத் தெய்வயானையம்மையார் வள்ளியம்மையார் உடனாக எழுந்தருளி நமக்கு அருள் புரிந்து வீற்றிருக்கும் வரலாறே. இவ் வரலாறும் புராணங்களில் ஒரு படித்தாகக் கூறப்படாமல் பலபடியாகக் கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறு இவ்வரலாறு பலபடியாகக் கூறப்படுதல் கந்தபுராணத்திலே "ஏதிலாக் கற்ப மெண்ணில சென்றன, ஆதலாலிக் கதையுமனந்தமாம்" எனக் கூறப்பட்டதுகொண்டே. ஆயினும் நமது நாட்டிலே கந்தபுராணத்திற் கூறப்பட்

டிருக்கும் வரலாறே சிறப்பாக வழங்கப்படுதலின் அவ் வரலாறு ஈண்டுச் சுருக்கமாகக் கூறப்படுகின்றது.

பிரமாவினுடைய மைந்தனாகிய தக்க னென்பவன் முழுமுதற்கடவுளான சிவபெருமானை இகழ்ந்து ஒரு வேள்வி செய்தான். அந்த வேள்விக்குப் பிரமா விட்டுணு இந்திரன் முதலிய தேவரனைவரும் சென் றிருந்தார்கள். அவ்வாறு சென்றிருந்த தீவினையின் பயனாக அவர்கள் வீரபத்திரராலே தண்டிக்கப் பட்டுப் பின்னும் எஞ்சி நின்ற பாவத்தினாலே சூரபது மன் முதலிய அசுரர்களாலே துன்புறுத்தப்பட்டார் கள். தேவர்கள் அத் துன்பம் பொறுக்க மாட்டாமல் சிவபெருமானிடஞ் சென்று முறையிட, அப்பெரு மான் 'நாம் ஒரு குமாரனைத் தந்து உங்கட் குண்டான துன்பத்தை அவனாலே நீக்குவோ' மென் றருள்செய்து தம்முடைய ஐந்து திருமுகங்களோடு அதோமுகமுங் கொண்டு எழுந்தருளியிருந்தார். அப்பொழுது அவரது திருவுள்ளத்தின் வண்ணம் ஆறு திருமுகங் களிலுமுள்ள நெற்றிக்கண்கள் ஆறினின்றும் ஆறு தீப்பொறிகள் தோன்றி உலகமுழுதும் பரவலுற்றன. அவற்றின் வெப்ப மாற்றாத தேவர்கள் சிவபெருமானி டஞ் சென்று விண்ணப்பஞ் செய்ய, சிவபெருமான் அப் பொறிகளைத் தம் மருகு மீண்டுவரச் செய்து அவற்றைக் காற்று தீ யென்பவர்பாற் கொடுத்து, சரவணப் பொய்கையில் விடுக்குமா றருள்செய்தனர். அத்தேவ ரிருவரும் அழல் வெம்மை பொறாது அவற்றைக் கங்கையில் விட, கங்கை சரவணத்திற் சேர்ப்ப, அப் பொறிகள் ஆறும் ஆறு திருக்குழந்தை களாகி ஸ்ரீ முருகக்கடவுள் தோன்றியருளினர். இவ்வாறு தோன்றியருளிய காலம் வைகாசி மாதத்து விசாகநா ளென்ப. அம் முருகக் கடவுள் வடிவமாகிய ஆறு

குழந்தைகளையும் கார்த்திகைப்பெண்கள் அறுவரும் பாலூட்டி வளர்த்தார்கள். ஒருநாள் சிவபெருமான் உமையம்மையாரோடு சரவணப்பொய்கையிற் சென்று. உமையம்மையாரை நோக்கி அக் குழந்தைகள் அறுவரையும் எடுத்துவரச் சொல்ல, அம்மையார் சென்றெடுத்து ஒரு வடிவமாக்கினர். அதனால் முருகப்பெருமான் கந்தனெனப் பெயர்பெற்றனர். முருகப்பெருமான் அளவில்லாத திருவிளையாடல்களைப் புரிந்து கடல் மலை வான மென்பவற்றுள் ஒன்றனை யொன்றாக மாற்றி நிற்கக் கண்ட தேவர்கள் அவரோடு போர்புரிய, அவர் அவர்களை யெல்லாம் கொன்று மீண்டும் உயிர் கொடுத்தருளித் தம்முடைய பேரருட்டிறத்தைக் காட்டினர். பின்னர் அப்பெருமான் நாரதரென்னும் பெயரினையுடைய முனிவரொருவர் செய்த வேள்வியிற் றோன்றித் தேவர்க்கு இடுக்கண் செய்த ஆடு ஒன்றைத் தமக்கு வாகனமாகக் கொண்டு நடத்தினர். சிவபெருமானை வணங்கிச் செல்லும் பிரமாவிடம் அப்பெருமான் ஓம் மொழியின் (பிரணவத்தின்) பொருளைக் கேட்க, அவர் அறியாது மயங்கியதால், அவரைச் சிறைச்சாலையிலடைத்துத் தாமே உலகப் படைப்பைச் செய்து பின்னர் சிவபெருமான் ஆணைப்படி அவரைச் சிறையினின்றும் விடுவித்து அப்பொருளைச் சிவபெருமானுக்கருளிச் செய்தனர். பின்னர் முருகக்கடவுள் அப்பொருளைத் தமது திருவருட்கு இலக்காகி நின்ற அகத்திய முனிவருக்கும் செவியறிவுறுத் தருளினர்.

இவ்வாறு முருகப்பெருமான் தமது இளம்பருவத் திருவிளையாடல் புரிந்திருந்த காலையில், சிவபிரான் அப்பெருமானை அழைத்து ‘ நீ எவராலும் வெல்லுதற்கரியனாகிய சூரபதுமனையும் மற்றும் அசுரர்களையும்

போர்செய்து வென்று பிரமன் முதலிய தேவர்களுடைய துன்பங்களை நீக்கி வருக' என்று பணித்தனர். முருகப்பெருமான் அவ் வாணையைச் சிரமேற்றாங்கிச் சிவபெருமான் விடுத்த ஓரிலக்கத்து ஒன்பது வீரர்களையும் ஈராயிர வெள்ளமென்னுந் தொகையினையுடைய வீரர்களையும் மற்றும் படைக்கலங்களையும் தேர்களையும் துணையாகக் கொண்டு நில உலகத்திற் கெழுந்தருளி வந்து முதலாவது தாரகாசுரனையும் கிரௌஞ்ச மலையையும் செற்றார். பின்னர் அப்பெருமான் பிரமா முதலியோர் வழிபடத் தேவகிரியினின்றும் புறப்பட்டுத் தில்லை முதலிய சிவப்பதிகளை வழிபட்டு மண்ணியாற்றின் தென்கரையிலே சேய்ஞலூரென்னும் நகரமொன்றாக்குவித்துச் சிவபெருமானை அங்கே எழுந்தருளச் செய்து வழிபடச் சிவபிரான் தமது படைக்கலத்தை அவருக்கு ஈந்தருளினர். அப்பால் பராசர முனிவரது புதல்வர்கள் அறுவர்க்குந் திருவருள் புரிந்து திருச்செந்தூரையடைந்து வியாழபகவானை நோக்கிச் சூரபதுமன் பெற்றுள்ள வரமும் செல்வமும் சிறப்பும் இந்திரனுடைய குறையுமாகிய இவற்றை அறியார் போன்று வினவி அவன் கூறத் தெரிந்தார். பின்னர் நவவீரருட் சிறந்த வீரவாகுதேவரைச் சூரபதுமனிடம் தூதாக அனுப்பிச் 'சூரபதுமனே, நீ தேவர்களைச் சிறையினின்று விடுவிப்பதானால் இன்னும் பலகாலம் அரசுபுரியலாம்; இன்றெனின் நாமே உனது கிளையையெல்லாம் வீட்டி. உன்னையும் வேற்படைக்கு இரையாகக் கொடுக்கப் போர் மேற்கொண்டு வருகின்றோம். இது மெய்ம்மை' என்று கூறுமாறு அருள் செய்து, சூரபதுமன் வீரவாகு தேவர் கூறிய நயமொழியைக் கேளாமையால், படை

யோடு புறப்பட்டு சூரபதுமன் நகராகிய வீர மகேந் திரத்தை யணுகிச் சூரபதுமனுடைய கிளையாகிய அசுரரையெல்லாம் தமது சேனுவீரராற் கொல்லு வித்துப் பின்பு சிங்கமுகா சுரனேயும் கொன்று இறுதியாக மாயையிலே வல்லவனுகியும் பல வரங் களும் செல்வமும் சிறப்பு முடையவனுகியும் ஆயிரத் தெட்டு அண்டங்களேயும் நூற்றெட்டு யுகம் ஆட்சி புரிந்தவனுகியுமுள்ள சூரபதுமனேயும் தமது வேற் படையால் இருகூ ருக்கினுர். அவ்வாறு முருகப் பெருமான் இருகூருக்கலும், ஒரு கூறு சேவலும் மற் றொரு கூறு மயிலுமாகி வர, மயிலேத் தமக்கு வாகன மாகவும் சேவலேத் தமக்குக் கொடியாகவு மமைத்து அன்றே மீண்டுந் திருச்செந்தூர் வந்து எழுந்தருளி யிருந்தனர். அப்பால் எம்பெருமான் அங்கு நின்றும் புறப்பட்டுத் திருப்பரங்குன்று செல்லத் தேவேந் திரன் தன்மகளாகிய தெய்வ யானேயம்மையாரை மணஞ்செய்து கொள்ளுமாறு வேண்ட, அதற் கிணங்கி மணஞ்செய்து தேவலோகஞ் சென்று இந்திரனேத் தேவர்கட்கு அரசனுக முடிசூட்டி அவன் வாழ்வை நிலேநிறுத்தினுர். பின்னர் அங்கு நின்றும் தமது பரிவாரங்கள் சூழக் கயிலாயமலே சென்று சிவபெருமானே வணங்கிக் கந்த வெற்பிலே யுள்ள தமது செம்பொற் றிருக்கோயிலிலே தெய்வ யானே யம்மையார் உடனுக வெழுந்தருளியிருந்தார்.

அங்ஙனஞ் சிலகாலஞ் செல்ல எம்பெருமான் அங்கு நின்று நீங்கித் திருத்தணிகைமலே சார்ந்து வீற்றிருந்த காலத்தில், நாரத முனிவரால் வள்ளி யம்மையாரது அழகு முதலியவற்றைத் தெரிந்து அம்மையார்பாற் சென்று பல திருவிளேயாடல்கள் புரிந்து அம்மையாரை வேட ரறியாமற் கொண்டு

சென்று, பின்னர் வேடர்கள் கூடி மணஞ் செய்து கொடுப்ப, அம்மையாரை ஏற்றருளினூர். சிலகாலம் முருகக்கடவுள் திருத்தணிகை மலேயில் தங்கியிருந்து பின்பு கந்த வெற்பிலேயுள்ள தமது ஆலயத்திற்கு எழுந்தருளித் தெய்வயானே யம்மையாரும் வள்ளி நாயகியாரும் ஆற்றலும் அன்பு மென்னு மிரண்டு கொடிகளாய்த் தம்மைத், தழுவத் தாம் ஓர் கற்பக மரமாகி உயிர்களுக் கெல்லாம் அருளே மலர்ந்து அடியா ரனேவருக்கும் முத்திக்கனியை எக்காலமுங் கொடுத்து வீற்றிருந்தருளுகின்ருர்.

மாட்சிமிக்க இவ் வரலாற்றிலே முருகப் பெருமானுக்கு அரன்மகன், கார்த்திகேயன், கங்கை மைந்தன், சரவணபவன், விசாகன், கந்தன், கௌரி நந்தனன், சண்முகன், ஆசான், தாரகாரி, தேவ சேநாபதி, வரைபக வெறிந்தோன், சூர்ப் பகைவன், தெய்வ யானே மணுளன், வள்ளி காந்தன், சுவாமி நாதன் முதலிய பெயர்கள் வந்ததற்குரிய வர லாறுகள் விளங்குத லறியப்படும்.

முருகப்பெருமான் இந் நிலவுலகத்திலே திருப் பரங்குன்றம், திருச்சீரலேவாயாகிய திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர் சோலே யென்னும் ஆறு படை வீடுகளிலும் எழுந்தருளியிருந்து தம்மை வழிபடு மடியார்களுக்கு வேண்டுவனவற்றை அருள்புரிகின்ருர்.

சிவபெருமானுக்கு மாகேச்சுரத் திருவுருவங்கள் இருபத்தைந்து கூறப்படுதல் போல முருகக் கடவுளுக்கும் ஞானசத்திதரர், கந்தர், தேவசேநாபதி, சுப்பிரமணியர், கஜாரூடர், சரவணபவர், கார்த்தி கேயர், குமாரர், சண்முகர், தாரகாந்தகர், சேநாபதி, பிரமசாத்தர், கலியாணர், பாலசுப்பிரமணியர்,

கிரௌஞ்சத் துவஞ்சர், மயூரவாகனரெனப் பல திருவுருவங்கள் கூறப்படுகின்றன.

முருகப்பெருமான் சிவசத்தியே யாவரென்பதும், அவருக்கும் சிவபெருமானுக்கும் எவ்வகை வேற்று மையுமின் றென்பதும், அப் பெருமான் தம்மை வழிபடும் அடியார்கட்குச் செல்வமும் ஞானமும் வீடுங்கொடுத் தருளுவ ரென்பதும் மெய்ம்மை. இவ் வுண்மை,

'நன்முக மிருமூன் றுண்டா னமக்கவை தாமே கந்தன்
றன்முக மாகி யுற்ற தாரகப் பிரம மாகி
முன் மொழிகின்ற நந்த மூவிரண் டெழுத்து மொன்று
முன்மக னமைத் தோரா றெழுத்தென வுற்ற வன்றே'

'ஆதலி னமது சத்தி யறுமுக னவனும் யாமும்
பேதக மன்று நம்போற் பிரிவிலன் யாண்டு நின்று
னேதமில் குழவி போல்வான் யாவையு முணர்ந்தான் சீரும்
போதமு மழிவில் வீடும் போற்றினர்க் கருளவல்லான்'

என உமையம்மையாருக்குச் சிவபெருமான் அருளி யனவாக வரும் கந்தபுராணச் செய்யுட்களா லறியப் படும். இதனை யறியாதார் சிலர் முருகப்பெருமான் மீது தமக்குள்ள அன்பு காரணமாக அவர் சிவபெரு மானினும் மேலானவரென்று கொண்டும், அவ்வாறு வழிபடுஞ் சமயம் கௌமார சமயமென்றும் கூறுவர். சாத்திரங்களிலே சமயங்கள் கூறப்படுமிடத்து கௌமாரமென ஒரு சமயம் கூறப்படாமையும் அவ ரறிகிலர். இவ்வாறே கணபத்தியமென ஒரு சமயம் உண்டென்பார் கூற்றும் மறுக்கப்படும்.

இன்னும் முருகப்பெருமான் தம்மைப் புகழ்நூல் வாயிலாய் வழிபட்ட நக்கீரர், கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள், அருணகிரி நாதர், சிற்றம்பல நாடிகள்,

குமர குருபர சுவாமிகள், சுவாமிநாத தேசிகர், கச்சியப்ப முனிவர், சுப்பிரமணிய முனிவர், முதலிய மெய்யடியார்களுக்கு அவர்கள் வேண்டியவற்றை வேண்டியாங் கருளினர்.

பத்திக்கு எல்லையெனத் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் முதலிய ஆசாரியர்களாற் போற்றப் பட்ட கண்ணப்ப நாயனர் திருத்தோற்றம், திருமுருகப் பெருமானை, அந் நாயனுரது தந்தையாகிய நாகன் வழிபட்ட தவத்தின் பயனுக நிகழ்ந்த தென்ருல், முருகப்பெருமானை வழிபடுதலால் உண்டாகும் பயன் இவ்வளவினதென்று நாம் கூற வேண்டியதில்லை.

சுருங்கக் கூறின், முருகப்பெருமானை வழிபடுதலால் நாம் செல்வம், கல்வி, மக்கட்பேறு, மறுமையின்பம், ஞானம், வீடுபேறு முதலிய எல்லாவற்றையும் அடைதல் கூடும். ஆதலால் அவ்வகைப்பய னெய்த விரும்பினேர் இங்கே சேர்க்கப்பட்டிருக்கும் தோத்திரங்களை நியமமாகப் பாராயணம் பண்ணுவாராக.

## காவடி

சூரபதுமனைச் சார்ந்த அசுரர்களில் ஒருவனை இடும்பனென்பவன் போருக்கு அஞ்சி யொளித்து அகத்தியரைச் சரணடைந்தான். அகத்தியர் தாம் சிவபெருமானிடம் பெற்றுக் கேதாரத்தில் வைத்து வந்த சிவகிரி சத்திகிரிகளை எடுத்துவருமாறு அவனை ஏவ, அவனும் அவ்வாறே காவுதடியில் இரு புறமும் வைத்துக் கட்டிக் கொண்டு வரும் வழியில், இளைப்பாறும் பொருட்டுப் பழநி வரையில் அவற்றை யிறக்கி வைத்தான். பின்னர் எடுக்கும் பொழுது அக் கிரி யெடுக்க வாராமையின், அம் மலையைச்

சுற்றிப் பார்க்கும் பொழுது ஒரு சிறுவன் அதன்மீது நிற்கக் கண்டு, அச் சிறுவனைக் கீழிறங்குமாறு இடும்பன் கூறினான். குமாரக்கடவுளாகிய அச் சிறுவன் இறங்காமையின் அவன் அச் சிறுவனோடு போர்புரியத் தொடங்கினான். அச் சிறுவனாகிய பெருமான் அவனைக் கொன்று மீண்டும் அவன்மேல் வைத்த பெருங்கருணையால் அவனை யுயிர்ப்பித்துத் தமது திருவருட் கோலத்தைக் காட்டியருளினர். இது பழநியில் நடந்த தொன்று. இதனைப் பின்பற்றியே இக்காலத்திற் பலரும் முருகப் பெருமானுக்குக் காவடி செலுத்துகின்றனர். இவ்வாறு செய்பவர்கள் பெருமானுக்குரிய திருமுழுக்குப் பொருள்களை எடுத்துச் செல்லுதலே பொருத்தமானது. ஆனால் அவ்வாறின்றி ஆவேசங் கொண்டு ஆடுதலும், பொதுமகளிரைக்கொண்டு பாடுவித்து ஊர்வலம் வருதலும் வீரசைவராகிய சங்க ஆண்டிகளாலே காவடியைப் பூசை செய்வித்து அவரிடமிருந்து சித்தாந்த சைவர்களாகிய தாம் திருநீறு பெறுதலும், இடும்பன் பூசையிலே கள்ளும் ஊனும் இடுதலும் கடவுளிடத்து அன்பு சிறிதும் தாராமையோடு இழிந்தபொருள்களைப் புலப்படுத்தும் பாட்டுக்களைப் பாடுவிப்பதும் மிகவும் அருவருக்கத்தக்கனவும் சிவனுக்குச் செய்யும் குற்றமுமான செய்கைகளாம். நம்மவர் இனியேனும் இவ் விழிந்த கொள்கைகளை யொழித்து அன்புடன் திருமுழுக்கு பொருள்களைக் கொண்டு சேர்ப்பித்து முருகப்பெருமான் திருவருட்கு ஆளாகுவாராக.

இந்துகலாசாலை, திருநெல்வேலி. } வி. சிதம்பரராமலிங்க பிள்ளை, தமிழாசிரியர்

# நூல் வரலாறு

பாண்டி நாட்டிலே, சோமசுந்தரக் கடவுள் அறுபத்து நான்கு திருவிளையாட லியற்றிய மதுரைப் பதியிலே இருந்த கடைச் சங்கத்துப் புலவர்களுள்ளே தலைவராய் விளங்கிய நக்கீரதேவர், 'கீர! நீ கைலை காணில் தொழுநோய் நீங்கும்' என்று சோமசுந்தரக் கடவுள் அருளியபடி ஏனைச் சங்கப்புலவர்பால் விடைபெற்று அரிதி னீங்கிக் கைலைக்கு விரைந்து, காசி கேதாரங் கடந்து செல்கையில் அங்கே கடலை யொத்த தொரு குளத்தைக் கண்டு, நீராடி, அதன் கரைக்கட் டமைத்ததோ ராலின் நீழலிற் சிவபூசை செய்துகொண்டிருந்தனர். அக் காலை யாலமரத்திலிருந்து ஓ ரிலை அவருக்கு முன்னே பாதி நீரிலும் பாதி கரையிலும் வீழ்ந்தது. நீரிலே வீழ்ந்த பாதி மீனும், கரையிலே வீழ்ந்த பாதி பறவையு மாகி, மீன் பறவையை நீரி னிழுக்கப் பறவை மீனை நிலத்தி னிழுத்தது. நக்கீரதேவர் அப் புதுமையைக் கண்டு மிக வியப்படைய சிவபூசைக்குத் தவறுண்டாயிற்று.

அதன்முன்பு அவ்விடத்திலே, சிவபூசையில் வழுவின வர்களாகிய தொளாயிரத்துத் தொண்ணூற்றொன் பதின்மரை ஒரு மலைக்குகையிலே அடைத்து வைத்துக் கொண்டு, இன்னும் ஒருவன் வேண்டுமெனக் காத்திருந்த ஒரு கரிய பூதம் நக்கீரரைத் தூக்கிச் சென்று அக் குகையி னுள்ளே அடைத்து ஆயிரவராக்கி, தன்நியமப்படி அகப்பட்ட அவ்வாயிரவரையும் உண்ணுதற்கு நீராடப்போயிற்று.

முன் அடைபட்டிருந்தவர்கள் எல்லாரும் நக்கீர தேவரை நோக்கி, 'நாங்கள் நெடுங்காலமாகச் சிறையில்

அடைபட்டிருந்தும் இப் பூதத்திறைல் உணவு முதலிய வைகளைப் பெற்றுப் பிழைத்திருந்தோம்; இன்றைக்கு உம்மாலே இதற் கிரையாகுங் காலஞ் சமீபித்தது' என்று அழுதார்கள். நக்கீரதேவர் அச் சொற்களைக் கேட்டு மனமிரங்கி, முருகக் கடவுளைப் பாடி னன்றி உய்தி யின்றுமென் றெண்ணித் திருமுருகாற்றுப்படை என்கின்ற இவ் வருள் நூலைப் பாடினார். உடனே முருகக்கடவுள் எதிர்வந்து, உண்ண வந்த பூதத்தைக் கதையான் மோதிக் கொன்று, யாவரையுஞ் சிறையின் நீக்கி, நக்கீரதேவரைப் பார்த்து 'இப் பாவினை நாடோறும் அன்புடனே ஓதுபவர் களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து வருவேம்' என்று திருவருள் செய்தருளினார்.

இது 317 அடிகளை யுடையது; வீடுபெறுதற்குச் சமைந்த ஒருவனை வீடுபெற்றா னொருவன் முருகக் கடவு ளிடத்தே ஆற்றுப்படுத்தியதாக நக்கீரதேவர் பாடியது. இப் பாட்டு முருகக்கடவுளுடைய திருப்பதிகளுட் சிறந்த திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஆறு படைவீட் டிலும் அவர் எழுந்தருளியிருத்தலைப் பாராட்டிக் கூறும்.

உ

திருச்சிற்றம்பலம்

# திருமுருகாற்றுப்படை

## 1. திருப்பரங்குன்றம்

### இணைக்குறளாசிரியப்பா

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்
திருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னுவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்

சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிண ரட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்
பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்
சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்
உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்

கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாய டுணங்கை தூங்க
இருபே ருருவி னொருபே ரியாக்கை
அறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்புரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுட
னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்த லூதி யெற்படக்
கண்போன் மலர்ந்த காமர் சுனைமல
ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலு முரிய னதாஅன்று ;

## 2. திருச்சீரலைவாய்

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்
டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனி னவிர்வன விமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்
மனனேர் பெழுதரு வாணிற முகனே
மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக
மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுக
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள்போலத் திசைவிளக் கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே யொரு
குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின் [முகங்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே யாங்கம்
மூவிரு முகனு முறைநவின் றொழுகலி
னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடு

வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபி னையர்க் கேந்திய
தொருகை உக்கஞ் சேர்த்திய தொருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய
அங்குசங் கடாவ வொருகை யிருகை [தொருகை
ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை
பாடின் படுமணி யிரட்ட வொருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட வாங்கப்
பன்னிரு கையும் பாற்பட வியற்றி
அந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல
உரந்தலைக் கொண்ட வுருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ
ரலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே யதாஅன்று;

## 3. திருவாவினன்குடி

சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பி
னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகற்
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்

கற்ரூே ரறியா வறிவினர் கற்ரூேர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசி றூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவி
னல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவல ரின்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவி
னவிர்தளிர் புரையு மேனிய ரவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலைய ரின்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குன்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
எருத்த மேறிய திருக்கிளர் செல்வனு
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகங் காக்கு மொன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக

ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப்
பகலிற் றோன்று மிகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரொ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
உருமிடித் தன்ன குரலினர் விழுமிய
உறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மா
ரந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னா
ளாவி னன்குடி யசைதலு முரிய னதாஅன்று;

## 4. திருவேரகம்

இருமூன் றெய்திய வியல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலு முரிய னதாஅன்று;

## 5. குன்றுதொறாடல்

பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேல
னம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணிய
னறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட் டேறற்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடிய னெடியன் றொடியணி தோள
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையி னியல வேந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே யதாஅன்று;

## 6. பழமுதிர் சோலை

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினு
மார்வல ரேத்த மேவரு நிலையினும்
வேலன் றைஇய வெறியயர் களனுங்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி யப்பியை துரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொ ளுருவி னிரண்டுட னுடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற வறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழிசை யருவியோ டின்னியங் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகண்
முருகிய நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனக
ராடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்

கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
ஆண்டாண் டுறைதலு மறிந்த வாறே
ஆண்டாண் டாயினு மாக காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமயத்து நீலப் பைஞ்சுனை
ஐவரு ளொருவ னங்கை யேற்ப
அறுவர் பயந்த வாறமர் செல்வ
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவிற் றானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவி லொருவ பொருவிறன் மள்ள
அந்தணர் வெறுக்கை யறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்த ரேறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே
அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக
நசையுநர்க் கார்த்து மிசைபே ராளா
அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேஎள்
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி.

போர்மிகு பொருந குரிசி லெனப்பல
யானறி யளவையி னேத்தி யானாது
நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையி
னின்னடி யுள்ளி வந்தெனி னின்னொடு
புரையுந ரில்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
அளியன் றானே முதுவா யிரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவு நல்லவு நனிபல வேத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
அணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
அஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென
அன்புடை நன்மொழி யளைஇ விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்
தொருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசி னல்குமதி பலவுடன்
வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்
தார முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
தண்கமழ் மலரிறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுத
லிரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று

நன்பொன் மணிநிறங் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுத றுமியத் தாழை
இளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலோ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கடல் விடரளைச் செறியக் கருங்கோட்
டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென விழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

திருமுருகாற்றுப்படை

முற்றிற்று



திருச்சிற்றம்பலம்.

## நேரிசை வெண்பா.

குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையா—யென்று
மிளையா யழகியா யேறூர்ந்தா னேறே
உளையாயென் னுள்ளத் துறை. (1)

குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவு
மன்றங் கமரரிடர் தீர்த்ததுவு—மின்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல். (2)

வீரவே ளூரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே டிருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
துளைத்தவே லுண்டே துணை. (3)

இன்ன மொருகா லெனதிடும்பைக் குன்றுக்குங்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். (4)

உன்னை யொழிய வொருவரையு நம்புகிலேன் [கைக்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிரு
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. (5)

அஞ்சு முகந்தோன்றி லாறு முகந்தோன்றும்
வெஞ்சமரி லஞ்சலென வேல்தோன்று—நெஞ்சி
லொருகா னினைக்கி லிருகாலுந் தோன்று
முருகாவென் றோதுவார் முன். (6)

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—யொருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுது
நம்பியே கைதொழுவே னுன். (7)

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கா
லார்க்குப் பரமா மறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
விடங்கா ணிரங்கா யினி. (8)

பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதங்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காம
லாசையா னெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். (9)

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினுன்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும். (10)

வேலுமயிலுந்துணை.

உ

திருசிற்றம்பலம்

# கந்தரலங்காரம்

## காப்பு

கட்டளைக் கலித்துறை

அடலரு ணைத்திருக் கோபுரத்
 தேயந்த வாயி லுக்கு
வடவரு கிற்சென்று கண்டுகொண்
 டேன்வரு வார்தலையிற்
றடபடெனப்படு குட்டுடன்
 சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக்
 கிளைய களிற்றினையே.

## நூல்

பேற்றைத் தவஞ்சற்று மில்லாத
 வென்னைப்ர பஞ்சமென்னுஞ்
சேற்றைக் கழிய வழிவிட்ட
 வாசெஞ் சடாடவிமே
லாற்றைப் பணியை யிதழியைத்
 தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான்
 குமாரன்க்ரு பாகரனே. (க)

அழித்துப் பிறக்கவொட் டாவயில்
வேலன் கவியையன்பா
லெழுத்துப் பிழையறக் கற்கின்றி
லீரெரி மூண்டதென்ன
விழித்துப் புகையெழப் பொங்குவெங்
கூற்றன் விடுங்கயிற்ருற்
கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன்
ருேகவி கற்கின்றதே. (உ)

தேரணி யிட்டுப் புரமெரித்
தான்மகன் செங்கையில்வேற்
கூரணி யிட்டணு வாகிக்
கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த
கடக நெளிந்ததுசூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர
லோகம் பிழைத்ததுவே. (ந)

ஓரவொட் டாரொன்றை யுன்னவொட்
டார்மல ரிட்டுனதாள்
சேரவொட் டாரைவர் செய்வதென்
யான்சென்று தேவருய்யச்
சோரநிட் டூரனைச் சூரனைக்
காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோரிமைப்
போதினிற் கொன்றவனே. (ச)

திருந்தப் புவனங்க ளீன்றபொற்
பாவை திருமுலைப்பா
லருந்திச் சரவணப் பூந்தொட்டி
லேறி யறுவர் கொங்கை

விரும்பிக் கடலழக் குன்றழச்
சூரழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென்
றோதுங் குவலயமே. (ரு)

பெரும்பைம் புனத்ினுட் சிற்றேனல்
காக்கின்ற பேதைகொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பி
னான்மெல்ல மெல்லவுள்ள
அரும்புந் தனிப்பர மானந்தந்
தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச்செந் தேனும்
புளித்தறக் கைத்ததுவே. (சு)

சளத்திற் பிணிபட் டசட்டுக்
ரியைக்குட் டவிக்குமென்ற
னுளத்திற் ப்ரமத்தைத் தவிர்ப்பா
யவுண ருரத்துதிரக்
குளத்திற் குதித்துக் குளித்துக்
களித்துக் குடித்துவெற்றிக்
களத்திற் செருக்கிக் கழுதாட
வேல்தொட்ட காவலனே. (எ)

ஒளியில் விளைந்த வுயர்ஞான
பூதரத் துச்சியின்மே
லளியில் விளைந்ததொ ரானந்தத்
தேனை யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப்
பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுக
மாறுடைத் தேசிகனே. (அ)

தேனென்று பாகென் றுவமிக் கொணு
மொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்கு பதேசித்த
தொன்றுண்டு கூறவற்ரே
வானன்று காலன்று தீயன்று
நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரி
யன்று சரீரியன்றே. (கூ)

சொல்லுகைக் கில்லையென் றெல்லா
மிழந்துசும் மாவிருக்கு
மெல்லையுட் செல்ல வெனைவிட்ட
வாவிகல் வேலனல்ல
கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக்
கல்வரை கொவ்வைச்செவ்வாய்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத்
தோளண்ணல் வல்லபமே. (ய)

குசைநெகி ழாவெற்றி வேலோ
னவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட
வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்து
மேரு அடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட வத்தூளின்
வாரி திடர்பட்டதே. (கக)

படைபட்ட வேலவன் பால்வந்த
வாகைப் பதாகையென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக்
கொள்ளச் சலதிகிழிந்

துடைபட்ட தண்ட கடாக
முதிர்ந்த துடுபடல
மிடைபட்ட குன்றமு மாமேரு
வெற்பு மிடிபட்டவே. (கஉ)

ஒருவரைப் பங்கி னுடையாள்
குமார னுடைமணிசேர்
திருவரைக் கிங்கிணி யோசை
படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட்
டெட்டுவெற் புங்கனகப்
பருவரைக் குன்று மதிர்ந்தன
தேவர் பயங்கெட்டதே. (கங)

* குப்பாச வாழ்க்கையுட் கூத்தாடு
மைவரிற் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை யீடேற்று
வாயிரு நான்குவெற்பு
மப்பாதி யாய்விழ மேருங்
குலுங்கவிண் ணாருமுய்யச்
சப்பாணி கொட்டிய கையா
றிரண்டுடைச் சண்முகனே. (கச)

தாவடி யோட்டு மயிலிலுந்
தேவர் தலையிலுமென்
பாவடி யேட்டிலும் பட்டதன்
றோபடி மாவலிபான்
மூவடி கேட்டன்று மூதண்ட
கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமாண்
மருகன்றன் சிற்றடியே. (கரு)

தடுங்கோண் மனத்தை விடுங்கோள்
வெகுளியைத் தானமென்று
மிடுங்கோ ளிருந்த படியிருங்
கோளெழு பாருமுய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றந்
திறக்கத் துளைக்கவைவேல்
விடுங்கோ னருள்வந்து தானே
யுமக்கு வெளிப்படுமே.

(கசு)

வேதா கமசித்ர வேலா
யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணுக
வல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே
யொளித்துச்சும் மாவிருக்கப்
போதா யினிமன மேதெரி
யாதொரு பூதர்க்குமே.

(கஎ)

வையிற் கதிர்வடி வேலோனை
வாழ்த்தி வறிஞர்க்கென்று
நொய்யிற் பிளவள வேனும்
பகிர்மின்க ளுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க வுதவா
வுடம்பின் வெறுநிழல்போற்
கையிற் பொருளு முதவாது
காணுங் கடைவழிக்கே.

(கஅ)

சொன்ன கிரௌஞ்ச கிரியூ
டுருவத் துளைத்தவைவேன்
மன்ன கடம்பின் மலர்மாலை
மார்பமௌ னத்தையுற்று

னின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா
மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேனிறந்
தேவிட்ட திவ்வுடம்பே. (கக)

கோழிக் கொடிய னடிபணி
யாமற் குவலயத்தே
வாழக் கருது மதியிலி
காளுங்கள் வல்வினைநோ
யூழிற் பெருவலி யுண்ணவொட்
டாதுங்க ளத்தமெல்லா
மாழப் புதைத்துவைத் தால்வரு
மோநும் மடிப்பிறகே. (உ0)

மரணப்ர மாத நமக்கில்லை
யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண்
டேகிங் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி
மங்கல்ய தந்துரட்சா
பரணக்ரு பாகர ஞானா
கரசுர பாற்கரனே. (உக)

மொய்தா ரணிகுழல் வள்ளியை
வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையுமங்கு வாழவைப்
போன்வெய்ய வாரணம்போற்
கைதா னிருப துடையான்
றலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருக னுமையாள்
பயந்த விலஞ்சியமே. (உஉ)

தெய்வத் திருமலைச் செங்கோட்டில்
வாழுஞ் செழுஞ்சுடரே
வைவைத்த வேற்படை வானவ
னேமற வேனுனைநா
னைவர்க் கிடம்பெறக் காலிரண்
டோட்டி யதிலிரண்டு
கைவைத்த வீடு குலையுமுன்
னேவந்து காத்தருளே. (உ௩)

இன்னங் குறித்தடி யேன்செவி
நீயன்று கேட்கச்சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி
விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக்
கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்றுகல்
யாண முயன்றவனே. (உ௪)

தண்டா யுதமுந் திரிசூல
மும்விழத் தாக்கியுனைத்
திண்டாட வெட்டி விழவிடு
வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியவென் னவிரோத
ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாவந்த காவந்து
பார்சற்றென் கைக்கெட்டவே. (உ௫)

நீலச் சிகண்டியி லேறும்
பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு
வான்குரு நாதன்சொன்ன

சீலத்தை மெள்ளத் தெளிந்தறி
வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப்
பார்வெறுங் கர்மிகளே. (உசு)

ஓலையுந் தூதருங் கண்டுதிண்
டாட லொழித்தெனக்குக்
காலையு மாலையு முன்னிற்கு
மேகந்த வேண்மருங்கிற்
சேலையுங் கட்டிய சீராவுங்
கையிற் சிவந்தசெச்சை
மாலையுஞ் சேவற் பதாகையுந்
தோகையும் வாகையுமே. (உஎ)

வேலே விளங்குகை யான்செய்ய
தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளவிங்ஙன் காண்பதல்
லான்மன வாக்குச்செய
லாலே யடைதற் கரிதா
யருவுரு வாகியொன்று
போலே யிருக்கும் பொருளையெவ்
வாறு புகல்வதுவே. (உஅ)

கடத்திற் குறத்தி பிரானரு
ளாற்கலங் காதசித்தத்
திடத்திற் புணையென யான்கடந்
தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்தசெவ்
வாயிற் பணையிலுந்தித்
தடத்திற் றனத்திற் கிடக்கும்வெங்
காம சமுத்திரமே. (உகூ)

பாலென் பதுமொழி பஞ்சென்
பதுபதம் பாவையர்கண்
சேலென் பதாகத் திரிகின்ற
நீசெந்தி லோன்றிருக்கை
வேலென் கிலேகொற் றமயூர
மென்கிலெவெட் சித்தண்டைக்
காலென் கிலேமன மேயெங்ங
னேமுத்தி காண்பதுவே. (௩௦)

பொக்கக் குடிலிற் புகுதா
வகைபுண்ட ரீகத்தினுஞ்
செக்கச் சிவந்த கழல்வீடு
தந்தருள் சிந்துவெந்து
கொக்குத் தறிபட் டெறிபட்
டுதிரங் குமுகுமெனக்
கக்கக் கிரியுரு வக்கதிர்
வேல்தொட்ட காவலனே. (௩௧)

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார்
புடன்கிரி யூடுருவத்
துளைத்துப் புறப்பட்ட வேற்கந்த
னேதுறந் தோருளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப்
பதைக்க வதைக்குங்கண்ணூர்க்
கிளைத்துத் தவிக்கின்ற வென்னையெந்
நாள்வந் திரட்சிப்பையே. (௩௨)

முடியாப் பிறவிக் கடலிற்
புகார்முழு துங்கெடுக்கு
மிடியாற் படியில் விதனப்
படார்வெற்றி வேற்பெருமா

ளடியார்க்கு நல்ல பெருமா
 ளவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாடிரு
 நாமம் புகல்பவரே. (௩௩)

பொட்டாக வெற்பைப் பொருதகந்
 தாதப்பிப் போனதொன் றற்
கெட்டாத ஞான கலைதரு
 வாயிருங் காமவிடாய்ப்
பட்டா ருயிரைத், திருகிப்
 பருகிப் பசிதணிக்குங்
கட்டாரி வேல்விழி யார்வலைக்
 கேமனங் கட்டுண்டதே. (௩௪)

*

பத்தித் துறையிழிந் தானந்த
 வாரி படிவதினல்
புத்தித் தரங்கந் தெளிவதென்
 றோபொங்கு வெங்குருதி
மெத்திக் குதிகொள்ள வெஞ்சூ
 ரனைவிட்ட சுட்டியிலே
குத்தித் தரங்கொண் டமரா
 வதிகொண்ட கொற்றவனே. (௩௫)

சுழித்தோடு மாற்றிற் பெருக்கா
 னதுசெல்வந் துன்பமின்பங்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ்
 சேகரிக் கோட்டுமுத்தைக்
கொழித்தோடு காவிரிச் செங்கோட
 னென்கிலை குன்றமெட்டுங்
கிழித்தோடு வேலென் கிலையெங்ங
 னேமுத்தி கிட்டுவதே. (௩௬)

கண்டுண்ட சொல்லியர் மெல்லியர்
காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேன்மற
வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டூ
டுடுடுடு டுண்டுடுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ்
சூர்க்கொன்ற ராவுத்தனே. (௩எ)

நாளென் செயும்வினை தானென்
செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென்
செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன்
னேவந்து தோன்றிடினே. (௩அ)

உதித்தாங் குழல்வதுஞ் சாவதுந்
தீர்த்தெனை யுன்னிலொன்ற
விதித்தாண் டருடருங் காலமுண்
டோவெற்பு நட்டுரக
பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம்
பம்பரம் பட்டுழல
மதித்தான் றிருமரு காமயி
லேறிய மாணிக்கமே. (௩௯)

சேல்பட் டழிந்தது செந்தூர்
வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி
யார்மன மாமயிலோன்

வேல்பட் டழிந்தது வேலையுஞ்
சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை
மேலயன் கையெழுத்தே. (சம)

பாலே யனைய மொழியார்த
மின்பத்தைப் பற்றியென்று
மாலேகொண் டுய்யும் வகையறி
யேன்மலர்த் தாள்தருவாய்
காலே மிகவுண்டு காலே
யிலாத கணபணத்தின்
மேலே துயில்கொள்ளு மாலோன்
மருகசெவ் வேலவனே. (சக)

* பிணங்காட்டுங் கொட்டிலை விட்டொரு
வீடெய்தி நிற்கநிற்குங்
குணங்காட்டி யாண்ட குருதே
சிகனங் குறச்சிறுமான்
பணங்காட்டு மல்குற் குருகுங்
குமரன் பதாம்புயத்தை
வணங்காத் தலைவந் திதெங்கே
யெனக்கிங்ஙன் வாய்த்ததுவே. (சஉ)

கவியாற் கடலடைத் தோன்மரு
கோனைக் கணபணக்கட்
செவியாற் பணியணி கோமான்
மகனைத் திறலரக்கர்
புவியார்ப் பெழத்தொட்ட போர்வேன்
முருகனைப் போற்றியன்பாற்
குவியாக் கரங்கள்வந் தெங்கே
யெனக்கிங்ஙன் கூடியவே. (சங)

தோலாற் சுவர்வைத்து நாலாறு
காலிற் சுமத்தியிரு
காலா லெழுப்பி வளைமுது
கோட்டிக்கை நாற்றிநரம்
பகலார்க்கை யிட்டுத் தசைகொண்டு
மேய்ந்த வகம்பிரிந்தால்
வேலாற் கிரிதுளைத் தோனிரு
தாளன்றி வேறில்லையே. (௪௪)

ஒருபூ தருமறி யாத்தனி
வீட்டி லுரையுணர்வற்
றிருபூத வீட்டி லிராமலென்
றுனிரு கோட்டொருகைப்
பொருபூ தரமுரித் தேகாச
மிட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவ னிட்டூர
சூர குலாந்தகனே. (௪௫)

நீயான ஞான விநோதந்
தனையென்று நீயருள்வாய்
சேயான வேற்கந்த னேசெந்தி
லாய்சித்ர மாதரல்குற்
றோயா வுருகிப் பருகிப்
பெருகித் துவளுமிந்த
மாயா விநோத மநோதுக்க
மானது மாய்வதற்கே. (௪௬)

பத்தித் திருமுக மாறுடன்
பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுதுகண்
டேன்செயன் மாண்டடங்கப்

புத்திக் கமலத் துருகிப்
பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுர ளும்பர
மானந்த சாகரத்தே. (சஎ)

புத்தியை வாங்கிநின் பாதாம்
புயத்திற் புகட்டியன்பாய்
முத்தியை வாங்க வறிகின்றி
லென்முது சூர்நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ
குவடு தவிடுபடக்
குத்திய காங்கேய னேவினை
யேற்கென் குறித்தனையே. (சஅ)

*

சூரிற் கிரியிற் கதிர்வே
லெறிந்தவன் தொண்டர்குழாஞ்
சாரிற் கதியன்றி வேறிலை
காண்தண்டு தாவடிபோய்த்
தேரிற் கரியிற் பரியிற்
றிரிபவர் செல்வமெல்லா
நீரிற் பொறியென் றறியாத
பாவி நெடுநெஞ்சமே. (சகூ)

படிக்குந் திருப்புகழ் போற்றுவன்
கூற்றுவன் பாசத்தினாற்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென்
பாய்பெரும் பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு காகொடுஞ்
சூர னடுங்கவெற்பை
இடிக்குங் கலாபத் தனிமயி
லேறு மிராவுத்தனே. (ரு௦)

மலையாறு கூறெழ வேல்வாங்கி
னானை வணங்கியன்பி
னிலையான மாதவஞ் செய்குமி
னோநும்மை நேடிவருந்
தொலையா வழிக்குப் பொதிசோறு
முற்ற துணையுங்கண்டீ
ரிலையா யினும்வெந்த தேதா
யினும்பகிர்ந் தேற்றவர்க்கே. (ருக)

சிகராத்ரி கூறிட்ட வேலுஞ்செஞ்
சேவலுஞ் செந்தமிழாற்
பகரார்வ மீபணி பாசசங்
க்ராம பணாமகுட
நிகராட் சமபட்ச பட்சி
துரங்க ந்ருபகுமரா
குகராட் சசபட்ச விட்சோப
தீர குணதுங்கனே. (ருஉ)

வேடிச்சி கொங்கை விரும்புங்
குமரனை மெய்யன்பினாற்
பாடிக் கசிந்துள்ள போதே
கொடாதவர் பாதகத்தாற்
றேடிப் புதைத்துத் திருட்டிற்
கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை
வீணுக்கு மாய்ப்பவரே. (ருங)

சாகைக்கு மீண்டு பிறக்கைக்கு
மன்றித் தளர்ந்தவர்க்கொன்
றீகைக் கெனைவிதித் தாயிலை
யேயிலங் காபுரிக்குப்

போகைக்கு நீவழி காட்டென்று
போய்க்கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலேவளேத் தோன்மரு
காமயில் வாகனனே. (ருச)

ஆங்கா ரமுமடங் காரொடுங்
கார்பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு
மறார்தினேப் போதளவு
மோங்காரத் துள்ளொளிக் குள்ளே
முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய்
வார்யம தூதருக்கே. (ருரு)

கிழியும் படியடற் குன்றெறிந்
தோன்கவி கேட்டுருகி
இழியுங் கவிகற் றிடாதிருப்
பீரெரி வாய்நரகக்
குழியுந் துயரும் விடாய்படிக்
கூற்றுவ னூர்க்குச்செல்லும்
வழியுந் துயரும் பகரீர்
பகரீர் மறந்தவர்க்கே. (ருசு)

பொருபிடி யுங்களி றும்விளே
யாடும் புனச்சிறுமான்
றருபிடி காவல சண்முக
வாவெனச் சாற்றிநித்த
மிருபிடி சோறுகொண் டிட்டுண்
டிருவினே யோமிறந்தா
லொருபிடி சாம்பருங் காணுது
மாய வுடம்பிதுவே. (ருஎ)

நெற்றுப் பசுங்கதிர்ச் செவ்வேனல்
காக்கின்ற நீலவள்ளி
முற்றுத் தனத்திற் கினிய
பிரானிக்கு முல்லையுடன்
பற்றுக் கையும்வெந்து சங்க்ராம
வேளும் படவிழியாற்
செற்றார்க் கினியவன் தேவேந்த்ர
லோக சிகாமணியே. (ருஅ)

பொங்கார வேலையில் வேலைவிட்
டோனருள் போலுதவ
எங்கா யினும்வரு மேற்பவர்க்
கிட்ட திடாமல்வைத்த
வங்கா ரமுமுங்கள் சிங்கார
வீடு மடந்தையருஞ்
சங்காத மோகெடு வீருயிர்
போமத் தனிவழிக்கே. (ருகூ)

சிந்திக்கி லேனின்று சேவிக்கி
லேன்றண்டைச் சிற்றடியை
வந்திக்கி லேனொன்றும் வாழ்த்துகி
லேன்மயில் வாகனனைச்
சந்திக்கி லேன்பொய்யை நிந்திக்கி
லேனுண்மை சாதிக்கிலேன்
புந்திக்கி லேசமுங் காயக்கி
லேசமும் போக்குதற்கே. (சூ0)

வரையற் றவுணர் சிரமற்று
வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித்
தவாபஞ்ச பூதமுமற்

றுரையற் றுணர்வற் றுடலற்
றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற்
றிருக்குமக் காட்சியதே. (கக)

ஆலுக் கணிகலம் வெண்டலை
மாலை யகிலமுண்ட
மாலுக் கணிகலந் தண்ணந்
துழாய்மயி லேறுமையன்
காலுக் கணிகலம் வானோர்
முடியுங் கடம்புங்கையில்
வேலுக் கணிகலம் வேலையுஞ்
சூரனு மேருவுமே. (கஉ)

* பாதித் திருவுருப் பச்சென்
றவர்க்குத்தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வே
லனைச்சென்று போற்றியுய்யச்
சோதித்த மெய்யன்பு பொய்யோ
வழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே
யெனக்கிங்ஙன் சந்தித்ததே. (கங)

பட்டிக் கடாவில் வருமந்த
காவனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாது
விடேன்வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு
மாள்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி
வாளென்றன் கையதுவே. (கச)

வெட்டுங் கடாமிசைத் தோன்றும்
வெங்கூற்றன் விடுங்கயிற்றாற்
கட்டும் பொழுது விடுவிக்க
வேண்டுங் கராசலங்க
ளெட்டுங் குலகிரி யெட்டும்விட்
டோடவெட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்குங்
கலாப மயூரத்தனே. (௬௫)

நீர்க்கு மிழிக்கு நிகரென்பர்
யாக்கைநில் லாதுசெல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு
மென்பர் பசித்துவந்தே
ஏற்கு மவர்க்கிட வென்னினெங்
கேனு மெழுந்திருப்பார்
வேற்கு மரற்கன் பிலாதவர்
ஞான மிகவுநன்றே. (௬௬)

பெறுதற் கரிய பிறவியைப்
பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற்
றிலேன்மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட்சங் க்ராம
சயில சரசவல்லி
இறுகத் தழுவுங் கடகா
சலபன் னிருபுயனே. (௬௭)

சாடுஞ் சமரத் தனிவேன்
முருகன் சரணத்திலே
ஓடுங் கருத்தை யிருத்தவல்
லார்க்குகம் போய்ச்சகம்போய்ப்

பாடுங் கவுரி பவுரிகொண்
டாடப் பசுபதிநின்
ருடும் பொழுது பரமா
யிருக்கு மதீதத்திலே. (சு அ)

தந்தைக்கு முன்னந் தனிஞான
வாளொன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி யெனைத்தேற்
றியபின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னை யென்செயலாஞ்
சத்திவா ளொன்றினூற்
சிந்தத் துணிப்பன் றணிப்பருங்
கோபத்ரி சூலத்தையே. (சுகூ)

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
பாதங்கள் மெய்ம்மைகுன்ரு
மொழிக்குத் துணைமுரு காவெனு
நாமங்கண் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு
தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங்
கோடன் மயூரமுமே. (எ०)

துருத்தி யெனும்படி கும்பித்து
வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென்
ஞெஞ்சிவ யோகமெனுங்
குருத்தை யறிந்து முகமா
றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண்
டீர்முத்தி கைகண்டதே. (எக)

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே. (எஉ)

போக்கும் வரவு மிரவும்
பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில்
லாதொன்று வந்துவந்து
தாக்கு மனோலயந் தானே
தருமெனைத் தன்வசத்தே
ஆக்கு மறுமுக வாசொல்
லொணாதிந்த வானந்தமே. (எங)

அராப்புனை வேணியன் சேயருள்
வேண்டு மவிழ்ந்தவன்பாற்
குராப்புனை தண்டையந் தாள்தொழல்
வேண்டுங் கொடியவைவர்
பராக்கறல் வேண்டு மனமும்
பதைப்பறல் வேண்டுமென்றால்
விராப்பக லற்ற விடத்தே
யிருக்கை யெளிதல்லவே. (எச)

படிக்கின் றிலைபழ நித்திரு
நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென்
கிலைமுசி யாமலிட்டு

மிடிக்கின் றிலேபர மானந்த
மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலேநெஞ்ச மேதஞ்ச
மேது நமக்கினியே. (எரு)

கோடாத வேதனுக் கியான்செய்த
குற்றமென் குன்றெறிந்த
தாடாள னேதென் றணிகைக்
குமரநின் றண்டையந்தாள்
சூடாத சென்னியு நாடாத
கண்ணுந் தொழாதகையும்
பாடாத நாவு மெனக்கே
தெரிந்து படைத்தனனே. (எசு)

* சேல்வாங்கு கண்ணியர் வண்ணப்
பயோதரஞ் சேரவெண்ணி
மால்வாங்கி யேங்கி மயங்காமல்
வெள்ளி மலேயெனவே
கால்வாங்கி நிற்குங் களிற்ருன்
கிழத்தி கழுத்திற்கட்டு
நூல்வாங்கி டாதன்று வேல்வாங்கி
பூங்கழல் நோக்குநெஞ்சே. (எஎ)

கூர்கொண்ட வேலனைப் போற்ரும
லேற்றங்கொண் டாடுவீர்காள்
போர்கொண்ட கால னுமைக்கொண்டு
போமன்று பூண்பனவுந்
தார்கொண்ட மாதரு மாளிகை
யும்பணச் சாளிகையு
மார்கொண்டு போவரை யோகெடு
வீர்நும் மறிவின்மையே. (எஅ)

பந்தாடு மங்கையர் செங்கயற்
பார்வையிற் பட்டுழலுஞ்
சிந்தா குலந்தனைத் தீர்த்தருள்
வாய்செய்ய வேல்முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ்
திருத்தணிக் குன்றினிற்குங்
கந்தா இளங்கும ராஅம
ராவதி காவலனே. (எகூ)

மாகத்தை முட்டி வருநெடுங்
கூற்றன்வந் தாலென்முன்னே
தோகைப் புரவியிற் றோன்றிநிற்
பாய்சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந்
தகனைத் த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல்
யாணிதன் பாலகனே. (அ௦)

தாரா கணமெனுந் தாய்மா
ரறுவர் தருமுலைப்பா
லாரா துமைமுலைப் பாலுண்ட
பால னரையிற்கட்டுஞ்
சீராவுங் கையிற் சிறுவாளும்
வேலுமென் சிந்தையவே
வாரா தகலந்த காவந்த
போதுயிர் வாங்குவனே. (அக)

தகட்டிற் சிவந்த கடம்பையு
நெஞ்சையுந் தாளிணைக்கே
புகட்டிப் பணியப் பணித்தரு

முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர
 லோகத்தை முட்டவெட்டிப்
பகட்டிற் பொருதிட்ட நிட்டூர
 சூர பயங்கரனே. (அஉ)

தேங்கிய அண்டத் திமையோர்
 சிறைவிடச் சிற்றடிக்கே
பூங்கழல் கட்டும் பெருமாள்
 கலாபப் புரவிமிசை
தாங்கி நடப்ப முறிந்தது
 சூரன் தளந்தனிவேல்
வாங்கி யனுப்பிடக் குன்றங்க
 ளெட்டும் வழிவிட்டவே. (அங)

மைவருங் கண்டத்தர் மைந்தகந்
 தாவென்று வாழ்த்துமிந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறி
 யேன்கற்ற கல்வியும்போய்ப்
பைவருங் கேளும் பதியுங்
 கதறப் பழகிநிற்கு
மைவருங் கைவிட்டு மெய்விடும்
 போதுன் னடைக்கலமே. (அச)

காட்டிற் குறத்தி பிரான்பதத்
 தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதல் மிகவெளி
 தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார
 நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற்
 சாதிக்கும் யோகிகளே. (அரு)

வேலா யுதன்சங்கு சக்ரா
யுதன்விரிஞ் சன்னறியாச்
சூலா யுதன்தந்த கந்த
சுவாமி சுடர்க்குடுமிக்
காலா யுதக்கொடி யோனரு
ளாய கவசமுண்டென்
பாலா யுதம்வரு மோயம
ேைைடு பகைக்கினுமே. (அசு)

குமரா சரணஞ் சரணமென்
றண்டர் குழாந்துதிக்கு
மமரா வதியிற் பெருமாள்
திருமுக மாறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான
ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு
வந்தினி யென்செயுமே. (அஎ)

வணங்கித் துதிக்க வறியா
மனித ருடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை யீடேற்று
வாய்கொடி யுங்கழுகும்
பிணங்கத் துணங்கை யலகைகொண்
டாடப் பிசிதர்தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலாயு
தந்தொட்ட நிர்மலனே. (அஅ)

பங்கே ருகனெனைப் பட்டோ
லையிலிடப் பண்டுதலை
தங்காலி லிட்ட தறிந்தில
னோதனி வேலெடுத்துப்

பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ்
சிலம்பு புலம்பவரு
மெங்கோ னறியி னினிநான்
முகனுக் கிருவிலங்கே (அக)

மாலோன் மருகனை மன்றாடி
மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான
தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோ
டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில
னேயந்த நான்முகனே. (கo)

கருமான் மருகனைச் செம்மான்
மகளைக் களவுகொண்டு
வருமா குலவனைச் சேவற்கைக்
கோளனை வானமுய்யப்
பொருமா வினைச்செற்ற போர்வே
லனைக்கன்னிப் பூகமுடன்
றருமா மருவுசெங் கோடனை
வாழ்த்துகை சாலநன்றே. (கக)

தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக்
குஞ்சுத்த ஞானமெனுந்
தண்டையம் புண்டரி கந்தரு
வாய்சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலங் கொண்டுபண் டண்டரண்
டங்கொண்டு மண்டிமிண்டக்
கண்டுருண் டண்டர்விண் டோடாமல்
வேல்தொட்ட காவலனே. (கஉ)

மண்கம ழுந்தித் திருமால்
வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங்
கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும்
பிள்ளை திருவரையிற்
கிண்கிணி யோசை பதினா
லுலகமுங் கேட்டதுவே. (௬௩)

தெள்ளிய ஏனலிற் கிள்ளையைக்
கள்ளச் சிறுமியெனும்
வள்ளியை வேட்டவன் தாள்வேட்
டிலைசிறு வள்ளை தள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத்
தோதகச் சொல்லைநல்ல
வெள்ளிய நித்தில வித்தார
மூரலை வேட்டநெஞ்சே. (௬௪)

யான்றா னெனுஞ்சொல் லிரண்டுங்
கெட்டாலன்றி யாவருக்குந்
தோன்றாது சத்தியந் தொல்லைப்
பெருநிலஞ் சூகரமாய்க்
கீன்றான் மருகன் முருகன்க்ரு
பாகரன் கேள்வியினாற்
சான்றாரு மற்ற தனிவெளிக்
கேவந்து சந்திப்பதே. (௬௫)

தடக்கொற்ற வேள்மயி லேயிடர்
தீரத் தனிவிடினீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின்
றோகையின் வட்டமிட்டுக்

கடற்கப் புறத்துங் கதிர்க்கப்
புறத்துங் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்துந் திசைக்கப்
புறத்துந் திரிகுவையே. (கசு)

சேலிற் றிகழ்வயற் செங்கோடை
வெற்பன் செழுங்கலபி
ஆலித் தனந்தன் பணுமுடி
தாக்க அதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க
ராசியுங் காசினியைப்
பாலிக்கு மாயனுஞ் சக்ரா
யுதமும் பணிலமுமே. (கஎ)

கதிதனை யொன்றையுங் காண்கின்றி
லேன்கந்த வேல்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்விலன்
பாய்நரம் பாற்பொதிந்த
பொதிதனை யுங்கொண்டு திண்டாடு
மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேயென்
றன்மனம் வேகின்றதே. (கஅ)

காவிக் கமலக் கழலுடன்
சேர்த்தெனைக் காத்தருளாய்
தூவிக் குலமயில் வாகன
னேதுணை யேதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம்
பிலாத தனிக்கொடிபோற்
பாவித் தனிமனந் தள்ளாடி
வாடிப் பதைக்கின்றதே. (கக)

இடுதலைச் சற்றுங் கருதேனைப்
போதமி லேனையன்பாற்
கெடுதலி லாத்தொண் டரிற்கூட்
டியவா கிரௌஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன்
பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது
பாச வினைவிலங்கே. (ள)

## நூற்பயன்

சலங்கா ணும் வேந்தர் தமக்குமஞ்
சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு
கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும்
யானைக்குங் கந்தனன்னூ
லலங்கார நூற்று ளொருகவி
தான்கற் றறிந்தவரே.

## கந்தரலங்காரம்

முற்றிற்று

---

## சில பதிப்புக்களில் மிகுதியாகக் காணப்படுவன.

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலுங் கடம்புந் தடம்புய மாறிரண்டு
மருவடி வான வதனங்க ளாறு மலர்க்கண்களுங்
குருவடி வாய்வந்தென் னுள்ளங் குளிரக் குதிகொண்டவே.

இராப்பக லற்ற விடங்காட்டி யானிருந் தேதுதிக்கக்
குராப்புனை தண்டையந் தாளரு ளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுண்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங் கார பயங்கரனே.

செங்கே ழடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்செங் கோடைக் குமரனென
எங்கே நினைப்பினு மங்கேயென் முன்வந் தெதிர்நிற்பனே.

ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் னருட்பதங்கள்
சேவிக்க வென்று நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே யமர சிகாமணியே.

கொள்ளித் தலையி லெறும்பது போலக் குலையுமென்ற
னுள்ளத் துயரை யொழித்தரு ளாயொரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி லேறிய மாணிக்கமே.

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் றனக்கொரு காலுமஞ் சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமார னறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே நமக்கொரு மெய்த்துணையே.

---

உ

திருச்சிற்றம்பலம்

# கந்தரனுபூதி

## காப்பு

நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரவா னைபதம் பணிவாம்.

## நூல்

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே. (க)

உல்லா சநிரா குலயோ கவிதச்
சல்லா பவினோ தனுநீ யலையோ
எல்லா மறவென் னையிழந் தநலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே. (உ)

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவினுன் மறையோ
யானோ மனமோ வெனையாண் டவிடந்
தானோ பொருளா வதுசண் முகனே. (ங)

வளைபட் டகைமா தொடுமக் களெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
துளைபட் டுருவத் தொடுவே லவனே. (௪)

மகமா யைகளைந் திடவல் லபிரான்
முகமா றுமொழிந் துமொழிந் திலனே
அகமா டைமடந் தையரென் றயருஞ்
சகமா யையுணின் றுதயங் குவதே. (௫)

திணியா னமனோ சிலைமீ துனதா
ளணியா ரரவிந் தமரும் புமதோ
பணியா வெனவள் ளிபதம் பணியுந்
தணியா வதிமோ கதயா பரனே. (௬)

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதா ணினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே. (௭)

அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா
குமரன் கிரிரா சகுமா ரிமகன்
சமரம் பொருதா னவநா சகனே. (௮)

மட்டூர் குழன்மங் கையர்மை யல்வலைப்
பட்டூ சல்படும் பரிசென் றொழிவேன்
றட்டூ டறவேல் சைலத் தெறியு
நிட்டூ ரநிரா குலநிர்ப் பயனே. (௯)

கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார் பவலா ரிதலா ரியெனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே. (௰)

கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவித்
தியாகா சுரலோ கசிகா மணியே. (கக)

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே. (கஉ)

முருகன் றனிவேன் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே. (கஙூ)

கைவாய் கதிர்வேன் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே யொழிவா யொழிவாய்
மெய்வாய் விழிநா சியொடுஞ் செவியா
மைவாய் வழிசெல் லுமவா வினையே. (கச)

முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகுஞ் செயறந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங் கவவெண் குணபஞ் சரனே. (கரு)

பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ
வீரா முதுசூர் படவே லெறியுஞ்
சூரா சுரலோ கதுரந் தரனே. (கசு)

யாமோ தியகல் வியுமெம் மறிவுந்
தாமே பெறவே லவர்தந் ததனாற்
பூமேன் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமே னடவீர் நடவீ ரினியே. (கஎ)

உதியா மரியா வுணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா
அதிகா வநகா வபயா வமரா
பதிகா வலசூ ரபயங் கரனே. (கஅ)

வடிவுந் தனமு மனமுங் குணமுங்
குடியுங் குலமுங் குடிபோ கியவா
அடியந் தமிலா வயில்வே லரசே
மிடியென் றொருபா விவெளிப் படினே. (கசு)

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியே
னுரிதா வுபதே சமுணர்த் தியவா
விரிதா ரணவிக் ரமவே ளிமையோர்
புரிதா ரகநா கபுரந் தரனே. (உ0)

கருதா மறவா நெறிகா ணவெனக்
கிருதாள் வனசந் தரவென் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூ ரவிபா டணனே. (உக)

காளைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே. (உஉ)

அடியைக் குறியா தறியா மையினான்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக் ரமவேன் மகிபா குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே. (உங)

கூர்வேல் விழிமங் கையர்கொங் கையிலே
சேர்வே னருள்சே ரவுமெண் ணுமதோ
சூர்வே ரொடுகுன் றுதுளைத் தநெடும்
போர்வே லபுரந் தரபூ பதியே. (உச)

மெய்யே யெனவெவ் வினைவாழ் வையுகந்
தையோ வடியே னலையத் தகுமோ
கையோ வயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயிலே றியசே வகனே. (உரு)

ஆதா ரமிலே னருளைப் பெறவே
நீதா னொருசற் றுநினைந் திலையே
வேதா கமஞா னவினோ தமனோ
தீதா சுரலோ கசிகா மணியே. (உசு)

மின்னே நிகர்வாழ் வைவிரும் பியயா
னென்னே விதியின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே யருளே
மன்னே மயிலே றியவா னவனே (உஎ)

ஆனா வமுதே யயில்வே லரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியவென் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே. (உஅ)

இல்லே யெனுமா யையிலிட் டனைநீ
பொல்லே னறியா மைபொறுத் திலையே
மல்லே புரிபன் னிருவா குவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே. (உகூ)

செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றொவ்வா தவெனு வுணர்வித் ததுதா
னவ்வா றறிவா ரறிகின் றதலா
லெவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே. (௩0)

பாழ்வாழ் வெனுமிப் படுமா யையிலே
வீழ்வா யெனவென் னைவிதித் தனையே
தாழ்வா னவைசெய் தனதா முளவோ
வாழ்வா யினிநீ மயில்வா கனனே. (௩க)

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரிவே டர்குலப் பிடிதோய்
மலையே மலைகூ றிடுவா கையனே. (௩௨)

சிந்தா குலவில் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே. (௩௩)

சிங்கா ரமடந் தையர்தீ நெறிபோய்
மங்கா மலெனக் குவரந் தருவாய்
சங்க்ரா மசிகா வலசண் முகனே
கங்கா நதிபா லக்ருபா கரனே. (௩௪)

விதிகா ணுமுடம் பைவிடா வினையேன்
கதிகா ணமலர்க் கழலென் றருள்வாய்
மதிவா ணுதல்வள் ளியையல் லதுபின்
றுதியா விரதா சுரபூ பதியே. (௩௫)

நாதா குமரா நமவென் றரனோ
ரோதா யெனவோ தியதெப் பொருடான்
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே. (௩௬)

கிரிவாய் விடுவிக் ரமவே லிமையோர்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய் மனனே பொறையா மறிவா
லரிவா யடியோ டுமகந் தையையே. (௩௭)

ஆதா ளியையொன் றறியே னையறத்
தீதா ளியையாண் டதுசெப் புமதோ
கூதா ளகிரா தகுலிக் கிறைவா
வேதா ளகணம் புகழ்வே லவனே. (௩௮)

மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவே டணையென் றுமுடிந் திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணருந்
தேவே சிவசங் கரதே சிகனே. (௩௯)

வினையோ டவிடுங் கதிர்வேன் மறவேன்
மனையோ டுதியங் கிமயங் கிடவோ
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதணோ டுதிரிந் தவனே. (௪௦)

சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனார் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞா னொபதே சிகனே. (௪௧)

குறியைக் குறியா துகுறித் தறியு
நெறியைத் தனிவே லைநிகழ்த் திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியா மையுமற் றதுவே. (௪௨)

தூசா மணியுந் துகிலும் புனைவா
ணேசா முருகா நினதன் பருளா
லாசா நிகளந் துகளா யினபின்
பேசா வனுபூ திபிறந் ததுவே. (௪௩)

சாடுந் தனிவேன் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே. (௪௪)

கரவா கியகல் வியுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோ கதயா பரனே. (௪௫)

எந்தா யுமெனக் கருடந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே யுமையாண்
மைந்தா குமரா மறைநா யகனே. (சகு)

ஆறா றையுநீத் ததன்மே னிலையைப்
பேறா வடியேன் பெறுமா றுளதோ
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா வுலகங் குளிர்வித் தவனே. (சஎ)

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும்வே லவனே. (சஅ)

தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையுங் க்ருபைசூழ் சுடரே. (சகூ)

மதிகெட் டறவா டிமயங் கியறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திரஞா னசுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே. (ருo)

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே. (ருக)

காணா விழியுங் கருதா மனமும்
வீணாய் விடமுன் விதியோ விதியோ
பூணா டிறமின் புனமும் வனமு
நாணா துநடந் திடுநா யகனே. (ருஉ)

ஊணே பொருளா யுழலுற் றடியேன்
வீணே கெடமுன் விதியோ விதியோ
பூணே யிமையோர் புகலே மகவான்
சேணே பெறவேல் விடுதே சிகனே. (ருங)

கழுகா ரயில்வேற் கருணைக் கடலின்
முழுகார் குறுகார் முளரிக் கைக்கொண்
டொழுகார் வினையூ டுழல்வா ரவரே
அழுகார் தொழுநோ யதிபா தகரே. (ருச)

விண்ணோர் பதமும் விரிநீர் புடைசூழ்
மண்ணோர் பதமு மகிழேன் மகிழேன்
றண்ணா ரமுதேய் சயிலப் பகையே
கண்ணா ருனருள் கனியைப் பெறினே. (ருரு)

உனையே யலதோர் பரமுண் டெனவே
நினையே னெனையும் வினைநீ டுமதோ
கனையேழ் கடல்போல் வருகா ரவுணர்
முனையே தெறுசண் முகவே லவனே. (ருசு)

இரவும் பகலுந் துதிசெய் திருதாள்
பரவும் பரிசே பரிசா யருள்வாய்
கரவுண் டெழுசூர் கலையக் கதிர்போன்
விரவுஞ் சுடர்வேல் விடுசே வகனே. (ருஎ)

இலகுந் துடிநே ரிடையார் விழிகூ
ரலகம் பெனவே யறியா தழிகோ
கலகந் தருசூர் கதறப் பொருதே
யுலகம் புகழ்பெற் றிடுமோ கையனே. (ருஅ)

மாதோ மலமாயை மயக்க வருஞ்
சூதோ வெனமெய் துணியா வெனையின்
றேதோ விருள்செய் துயிறைந் திடுவார்
தீதோ டவருள் சிவதே சிகனே. (ருகூ)

களவும் படிறுங் கதமும் படுமெ
னளவுங் கதிர்கொண் டருள்சேர்ந் திடுமோ
இளகுங் குறமின் னிருகொன் முலையும்
புளகம் பரவப் புணர்வே லவனே. (சு௦)

வாழைக் கனிமா மதுரச் சுளையே
ஏழைக் கரிதென் றிடுவா ருளரோ
பாழைப் பயிர்செய் திடுசிற் பரையின்
பேழைப் பொருளா கியபே ரொளியே. (சுக)

சதிகொண் டமடந் தையர்தம் மயலிற்
குதிகொண் டமனத் தனெனக் குறியேன்
மதிகொண் டநுதற் குறமங் கைகுயந்
துதிகொண் டுமணந் தருமே யவனே. (சுஉ)

தாயே யெனையா டனிவே லரசே
காயே பொருளாய்க் கனிகை விடுமோ
பேயே னிடையென் பெறவந் தெளிதாய்
நீயே மறவா நெறிதந் ததுவே. (சுஙு)

சின்னஞ் சிறியேன் சிதைவே செயினும்
பென்னம் பெரியோர் பிழைசெய் குவரோ
கன்னங் கரியோன் மருகா கழறத்
தன்னந் தனியே தனையாண் டவனே. (சுச)

துடிபட் டமடந் தையர்கூ றையிலே
குடிபட் டிடுமென் குறைகட் டறுமே
வெடிபட் டெழுசூர் கிளைவே ரொடுசென்
றடிபட் டிடவென் றமரும் பதியே. (சுரு)

கல்லேய் மனமுங் கணையேய் விழியும்
வில்லேய் நுதலும் பெறுமெல் லியர்வாய்ச்
சொல்லே பதமாய்த் துடிபட் டழிய
வல்லே னலனி யான்மயில்வா கனனே. (சுசு)

கலைகற் றிலுமென் கவிபா டிலுமென்
நிலைகற் றிலுமென் நினைவந் துணராக்
கொலைகற் றிடுவோர் கொடுவஞ் சகமா
மலைகட் டறவென் றருள்வாய் குகனே. (௬௭)

சனகா தியருக் கரியாய் தமியை
எனகா ரணமா கவிரும் பினைநீ
கனகா சலவில் விகளிக் கவரு
மநகா வமலா வமரர் பதியே. (௬௮)

கல்லே னயலார் கவியைப் பொருளாய்ப்
புல்லே னவர்வாழ் வுபுரிந் தருள்வாய்
வல்லே யினிவந் தருளா யணியா
நில்லே னிறைநெஞ் சொடுவே லரசே, (௬௯)

மஞ்சைப் பொருவார் குழலார் மயலாற்
பஞ்சைப் பலதே வரையும் பரவா
நெஞ்சைப் புரிவாய் நிகழ்மா மதியின்
பிஞ்சைப் புனையும் பெருமான் மகனே. (௭௦)

விதிவந் தனைசெய் விமலன் கழலே
கதியென் றடைவார் கடனு வதுவே
வதிவன் பிணியோ டழிநல் குரவும்
மதிசஞ் சலமு மண்ணுய் விடுமே. (௭௧)

எந்நே ரமுநின் னிருதாண் மலரைப்
பொன்னே யெனயான் புனையப் பெறினெ
னன்னே யமுதே யயில்வே லரசே
கொன்னே பிறவிக் குறைபெற் றிலனே. (௭௨)

அருளைத் தருநின் னடியைப் பணியா
மருளைச் சிதையார் மதிகெட் டவர்தங்
குருளைத் திசையிற் குறியோன் வினவும்
பொருளைத் தெளியப் புகறே சிகனே. (௭௩)

தொண்டா கியகந் துயர்தீ ருமருந்
துண்டா கியுமென் றுலைவாய் மனனே
வண்டார் குழல்வள் ளிமணந் தருளுந்
தண்டா ரயில்வேல் சரணந் துதியே. (எச)

அழியா நிலைதந் தருள்சே வலனே
விழியா லுணர்வார் விதமே புகல்வாய்
பழியார் புகழார் பழிநண் பிகழா
ரொழியா ரொழியா ருலகியா வையுமே. (எரு)

துனிநா ளும்விடா துதொடர்ந் தபல
னினிநா னனுகா மையியம் பினனுற்
பனிநாண் மதிசூ டிபணிந் துதொழுந்
தனிநா யகனு கியசண் முகனே. (எசு)

ஞானந் தனினின் றுநடித் தல்விடா
மோனந் தனையென் றுமொழிந் திடுவா
யானந் தநடத் தனளித் தருளும்
மானந் தனிவேன் மயில்வா கனனே. (எஎ)

மதமுஞ் சினமும் வளருந் தனுவே
சதமென் றுணருஞ் சனனுக் கெளிதோ
கதமுந் தியசூர் கடிவே லவநின்
பதமுஞ் சிதமும் பரமும் பெறவே. (எஅ)

ஐயா ருடலன் னியமா னனதா
றையா றையும்நீ யறிவித் தருள்வாய்
செய்யா றுமுகா திகழ்வே லரசே
அய்யா குமரா வருளா கரனே. (எகூ)

நவியென் றிடுகண் மடவார் நனிகேள்
செவியென் றயில்வேள் புகழ்சென் றிலதோ
கவியென் றிடுநால் வளமுங் கமழப்
புவியென் றுமிருந் தொளிர்புண் ணியரே. (அ0)

பெரியோ ரெனினும் புலையோ ரெனினுஞ்
சிறியோ ரெனினுந் தெளிவோ ரவரே
குறியோ ரெனினுங் குருவா வருவா
னெறியோ டொழுகு நிலைபெற் றிடினே. (அக)

பத்திக் கயலே னனிநின் பதமுஞ்
சித்திக் கவிடே னிதுதிண் ணமதே
புத்திக் கடலே பொரும்வே லரசே
முத்திக் கனியே முனிபுங் கவனே. (அஉ)

பேயா கிலும்நன் றதிலும் பிறிதென்
றுயா தெனைவந் தடிமைத் தொழில்கொண்
டோயா தினிநீ யுணர்வைத் தருவாய்
வாயா ரமுதே மயில்வா கனனே. (அங)

மிகவுங் கொடியேன் விதிகுன் றிடவந்
திகமும் பரமுந் தரவென் றிசைவாய்
சுகமுங் ககமுந் தொடர்வேல் கொடுமுச்
சகமுந் தனிகாத் தருள்சண் முகனே. (அச)

நசையன் பிலர்பால் நயவா தொழியின்
வசையுண் டெனுமவ் வழிநின் றருள்வாய்
விசையம் புகல்சூர் வெருவப் பொருதெண்
டிசையும் புகழத் திகழ்வே லவனே. (அரு)

உறுகற் பகமென் றுனையே யடைவேன்
இறுகற் பகைவற் கிதமோ துமதோ
தெறுகற் சிலைகொண் டெயில்செற் றிடுபூண்
டறுகட் செவியன் தருபுத் திரனே. (அசு)

கள்ளம் படுகண் கடையார் கடைதே
டுள்ளம் படுமென் றுகளைக் களைவாய்
கள்ளம் படுநீ ரெனவே பரிவின்
வெள்ளம் படுநல் வழிவே லவனே. (அஎ)

வள்ளைக் குழைமங் கையர்சிங் கியிலே
கொள்ளைப் படுமென் குறைதீ ருமதோ
வெள்ளைத் தனிமால் விடையன் புகழும்
பிள்ளைப் பெருமா ளெனும்பெற் றியனே. (அஅ)

வளையுஞ் சகமா யைமயக் கில்விழுந்
துளையுந் துயரின் னுமுணர்ந் திலையே
அளையுண் டபிரான் மருகா விடுசூர்
களையுஞ் சினவெங் கதிர்வே லவனே. (அகூ)

பண்டே தொடர்பற் றெருடுசுற் றமெனும்
வெண்டே ரைமகிழ்ந் துவிழித் திடவோ
கண்டே குறமங் கைதனைக் களவிற்
கொண்டே கடிதே கியகொற் றவனே. (கூ0)

பொன்னு வல்கெடப் பொழியும் புகழோ
ரின்று ரினியா ரெனவெண் ணுவரோ
துன்னார் கிளைவே ரறவே தொடும்வேன்
மன்னு பொதுவாய் மழைபெய் திடுமே. (கூக)

பொறியும் புனலும் புதிது முதிதுங்
குறியுங் குணமுங் குலமுங் குடியு
நெறியும் பரிசொன் றுமிலா நிலையா
னறியுந் தரமோ வேலா யுதனே. (கூஉ)

எங்கே ரமதோ தெரியா திறனு
மங்கே ரமதொன் றுகா தெனமுன்
சொன்னோ மனனே துவலோ துவலோ
தன்னேர் குகனற் சலசச் சரணே. (கூ௩)

தெரியத் தெரியச் செயலுற் றிடுமுன்
துரியப் பொருளைச் சொலுநா ளுளதோ
கரிபெற் றிடுமின் கணவா குறமின்
பரியப் பெரிதும் பணியுத் தமனே. (கூ௪)

மடிமைப் படினு மயலுற் றிடினு
மடிமைக் குடியா ரருள்சே ருவரே
குடிமைக் கிலதோர் கொடுவெற் பதிரப்
படிமைப் புயலே பரிவா யினியே. (௬௫)

வரிவேன் விழியாம் வலைவீ சுமினார்
புரிவே லையிலே பொருதிக் கனைவாய்
பரிவே டம்வளைந் ததுபோ லவுணர்த்
தெரிவேன் முனைமே லெறிசே வகனே. (௬௬)

நனவிற் படுநல் லுலகத் தனையுங்
கனவிற் பொருளாய்க் கருதா வெனைநீ
வினவிச் சொலுநா ளுளதோ விதியைச்
சினவிச் சிறைவிட் டருடே சிகனே. (௬௭)

காடு மலையுங் கடலு முருளச்
சாடுந் தனிவே லுடையாய் சரண
மாடு மயில்வே லரசே சரணம்
பாடும் வரதற் பரனே சரணம். (௬௮)

அனியா யமிதென் றவரே மடவார்
துனியார் பவமுந் துயருங் களைவார்
கனியார் முருகன் கழல்பெற் றிடுவா
ரினியா ரினியா ரிவருக் கிணையே. (௬௯)

ஆளா யயில்வே ளடியிற் படிவார்
கோளாற் பிறரைக் குறிசெய் தழியார்
மாளார் சமனுன் மறுகார் பகையான்
மீளார் வினையான் வெருவா ரவமே. (௭௰)

உடலைச் சுமையா கழயற் சிகெடா
நடலைத் துணிவாழ் வைநயந் திடவோ
கடலைத் துகள்செய் திடவேற் கடவும்
விடலைப் பெருமா னெனும்வித் தகனே. (௭௧)

பிணியும் பசியும் பெருகுந் துயரி
லணியுங் கழல்கட் கயலாய் விடவோ
கணியுங் குரவுங் கமழோ திமயற்
றணியும் படிவந் தருள்சண் முகனே. (௱௨)

கல்லுங் கரையக் கவிபா டியிதஞ்
சொல்லுந் தொழிலே தொழிலாய் விடவோ
கொல்லுந் தொழிலிற் கொடியோர் மடியச்
செல்லுஞ் சுடர்வேற் செறிபா ணியனே. (௱௩)

முறுகுந் தழல்போன் முடுகுஞ் சமனுன்
மறுகும் பொழுது மறவேன் மறவேன்
குறுகுங் குலிசன் குலவா ரணமால்
பெறுகுஞ் சரிதோய் பெருமா னடியே. (௱௪)

வாழ்வா ருறவாய் மகிழ்வார் பலருந்
தாழ்வார்க் கருளுந் தமனீ யலையோ
பேழ்வா யரவும் பிறைவெள் ளிறகுஞ்
சூழ்வார் சடையார் தொழுதே சிகனே. (௱௫)

---

உ

திருச்சிற்றம்பலம்

# கந்தரந்தாதி

## காப்பு

### விநாயகர் வணக்கம்

வாரணத் தானை யயனைவிண்
ணோரை மலர்க்கரத்து
வாரணத் தானை மகத்துவென்
றோன்மைந் தனைத்துவச
வாரணத் தானைத் துணைநயந்
தானை வயலருணை
வாரணைத் தானைத் திறைகொண்ட
யானையை வாழ்த்துவனே.

உண்ணு முலையுமை மைந்தா
சரணம் பரருயிர்சேர்
உண்ணு முலையுமை மைந்தா
சரண மருணைவெற்பாள்
உண்ணு முலையுமை மைந்தா
சரணந் தனமுமொப்பில்
உண்ணு முலையுமை மைந்தா
சரணஞ் சரணுனக்கே.

## நூல்

திருவாவி னன்குடி பங்காள
ரெண்முது சீருரைச
திருவாவி னன்குடி வானூர்
பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரகங்
குன்றுதொ ருடல்சென்ற
திருவாவி னன்குடி கொண்டதண்
கார்வரை செப்புமினே. (க)

செப்புங் கவசங் கரபாலக
தெய்வ வர்வியம்பு
செப்புங் கவசங் கரிமரு
காவெனச் சின்னமுன்னே
செப்புங் கவசம் பெறுவார்க
ணுந்தெய்வ யானைதனச்
செப்புங் கவசம் புனைபுயன்
பாதமென் சென்னியதே. (உ)

சென்னிய மோகந் தவிராமு
தோகண் டிகிரிவெண்ணெய்ச்
சென்னிய மோகம் படவூ
தெனத்தொனி செய்தபஞ்ச
சென்னிய மோகந் தரம்புனத்
தேன்புணர் தேவைத்தெய்வச்
சென்னிய மோகம் பணிபணி
யேரகத் தேமொழிக்கே. (ங)

தேமொழி யத்தம் பெறவோந்
தனக்கன்று சேணுலகத்
தேமொழி யத்தம் சினக்காட்
டவுணரைச் சேமகரத்

தேமொழி யத்தம் புயமவர்
சூடிகை சிந்தவென்ற
தேமொழி யத்தம் பதிறு
லுலகுமந் தித்ததொன்றே. (௪)

தித்தவித் தார மணித்தரைத்
தேவர் வணங்குமுன்போ
தித்தவித் தாரகை மைந்தர்செந்
தூர்க்கந்தர் சிந்துரவா
தித்தவித் தார முடையா
ரருள்வெள்ளந் தேக்கியன்பு
தித்தவித் தாரந் தனிவீ
டுறத்துக்கச் செவ்வனலே. (௫)

செவ்வந்தி நீலப் புயமுரு
காபத்தர் சித்தமெய்யிற்
செவ்வந்தி நீலத்தை யுற்றருள்
வாய்திங்கட் சேய்புனைந்த
செவ்வந்தி நீலத் தொருபாகர்
போன்ற தினிச்சிந்தியார்
செவ்வந்தி நீலத்தி னீடுமுற்
ருத திமிரமுமே. (௬)

திமிரத் திமிரக் கதரங்க
கோபசெவ் வேலகைவேல்
திமிரத் திமிரக் கருலாந்
தகவரைத் தேன்பெருகுந்
திமிரத் திமிரத் தனையாவி
யாளுமென் சேவகனே
திமிரத் திமிரக் கனலாய
சந்தன சீதளமே. (௭)

சீதனங் கோடு புயங்கைகொண்
டார்தந் திருமருக
சீதனங் கோடு முடியாளர்
செய்தனக் கேதுளதோ
சீதனங் கோடு னிதருமென்
பார்தொழுந் தேவிபெறுஞ்
சீதனங் கோடு கொடிவேன்
மயூரஞ் சிலையரசே. (அ)

சிலைமத னம்படு மாறெழுஞ்
செய்மயி லுச்சிட்டவெச்
சிலைமத னம்படு சிந்துவை
யிந்துவைச் செய்வதென்யான்
சிலைமத னம்படு காட்டுவர்
கேளிருஞ் செங்கழுநீர்ச்
சிலைமத னம்படு தாமரை
வாவி திரள்சங்கமே. (கூ)

திரளக் கரக்கரை வென்கண்ட
வேலன் றிசைமுகன்மால்
திரளக் கரக்கரை யான்பாட
நாடுதல் செய்யசங்க
திரளக் கரக்கரை காண்பான்கைந்
நீத்திசை வார்பனிக்க
திரளக் கரக்கரை வானீட்டு
மைந்தர்புக் திக்கொக்குமே. (ம)

திக்கத்திக் கோடு படிபுடைச்
சூதத் தெறிபடபத்
திக்கத்திக் கோடு கடடக்
கடறடி சேப்படைச்சத்

திக்கத்திக் கோடு துறைத்திறத்
தற்ற குறக்குறச்சத்
திக்கத்திக் கோடு பறித்துக்கொ
டாதி சிறைபிறப்பே. (கக)

சிறைவர வாமையி லேறிச்
சிகரி தகரவந்து
சிறைவர வாமையில் கூப்பிடத்
தானவர் சேனைகொண்ட
சிறைவர வாமையில் வாங்கிதன்
றேங்கழல் யாங்கழலாச்
சிறைவர வாமையி னெஞ்சுட
னேநின்று தேங்குவதே. (கஉ)

தேங்கா வனமும் மதகரி
வேந்துடன் சேர்ந்தவிண்ணோர்
தேங்கா வனமுனை யவ்வேற்
பணியெனுஞ் சேயிடமேல்
தேங்கா வனமுந் தளர்நடை
யாயஞ்சல் செண்பகப்பூந்
தேங்கா வனமுங் கழுநீடரி
லஞ்சியுஞ் செந்திலுமே. (கரு)

செந்தி லகத்தலர் வாணுதல்
வேடிச் சிமுகபங்க
செந்தி லகத்தலர் துண்டமென்
றுநின்ற சேயசங்க
செந்தி லகத்தலர் ராசிதந்
தானைச் சிறையிட்டவேற்
செந்தி லகத்தலர் தூற்றிடுங்
கேடு திவாகருளே. (கச)

திவாகர கன்ன கொடைப்பாரி
　　யென் றுழ றீனவல்லீர்
திவாகர கன்ன புரக்குழை
　　வல்லி செருக்குரவந்
திவாகர கன்ன சுகவா
　　சகதிறல் வேல்கொடென்புந்
திவாகர கன்ன மறலியி
　　டாதுயிர்ச் சேவலுக்கே. (கரு)

சேவற் கொடியும் பனிசாந்
　　தகனுந் திருக்கரத்துச்
சேவற் கொடியுங் கொடியகண்
　　டாய் தினை சூழ்புனத்துச்
சேவற் கொடியுந் திவளத்
　　தவளுந் தந்திக்களபச்
சேவற் கொடியு முடையாய்
　　பிரியினுஞ் சேரினுமே. (கசு)

சேரிக் குவடு மொழிவிழி
　　யாடனச் செவ்விகுறச்
சேரிக் குவடு விளைந்த
　　தன்றேநன்று தெண்டிரைநீர்
சேரிக் குவடு கடைநாளி
　　லுஞ்சிதை வற்றசெவ்வேள்
சேரிக் குவடு புடைசூழ்
　　புனத்திற் றினைவிளைவே. (கஎ)

தினைவேத் தியன்புசெய் வேந்தன்
　　பதாம்புயத் திற்பத்திபுந்
தினைவேத் தியமுகந் தேற்றினர்
　　மாற்றினர் பாற்றினந்தீத்

திணைவேத் தியர்நெறி செல்லாத
    விந்தியத் தித்தியினைத்
திணைவேத் தியங்குயிர் கூற்ற‌ுரி
    லூசிடுஞ் சீயுடம்பே. (கஅ)

சீயனம் போதி யெனவாய்
    புதைத்துச் செவிதரத்தோல்
சீயனம் போதி யமலையிற்
    றுதை சிறுமுனிவன்
சீயனம் போதி கடைந்தான்
    மருகன்செப் பத்திகைத்தார்
சீயனம் போதி லரணு
    திருக்கென் செயக்கற்றதே (கக)

செயதுங்க பத்திரி போற்றும்
    பகீர திகரசெவ்வேற்
செயதுங்க பத்திரி சூடுங்
    குறத்தி திறத்ததண்டஞ்
செயதுங்க பத்திரி புத்திரி
    பாதத்தர் செல்வதென்பாற்
செயதுங்க பத்திரி யத்திரி
    யாதிரென் சிந்தையிலே. (உ0)

சிந்தா குலவ ரிசைப்பேரு
    மூருநஞ் சீருமென்றோர்
சிந்தா குலவ ரிடத்தணு
    காதரு டமதலை
சிந்தா குலவரி மாயூர
    வீர செகமளப்பச்
சிந்தா குலவ ரிமருக
    சூரனைச் செற்றவனே. (உக)

செற்றை வரும்பழ னஞ்சோலை
யிஞ்சி திகழ்வரைமேற்
செற்றை வரும்பழ னிக்கந்த
தேற்றிடு நூற்றுவரைச்
செற்றை வரும்பழ நாடாள
நாடிகண் சேய்விடுத்த
செற்றை வரும்பழ மாங்கூடு
வேமத்தி னத்தில்வந்தே. (உஉ)

தினகர ரக்கர தங்கெடுத்
தார்குரு தேசிகர்செந்
தினகர ரக்கர மாறுடை
யார்தெய்வ வாரணத்தந்
தினகர ரக்கர சத்தியின்
றுகிலத் தேவர்நண்ப
தினகர ரக்கர தந்தீர்வ
ரீர்வர் செகமெங்குமே. (உங)

செகம்புர வார்கிளை யெல்லா
மருண்டு திரண்டுகொண்ட
செகம்புர வாதிங்ஙன் செய்வதென்
ளுமையல் செய்யவன்பு
செகம்புர வாச மெனத்துயில்
வார்செப்ப பங்கபங்க
செகம்புர வாமுரல் செந்தூர
வென்னத் தெளிதருமே. (உச)

தெளிதரு முத்தமிழ் வேதத்திற்
றெய்வப் பலகையின்கீழ்
தெளிதரு முத்தமி ழாய்த்தர்
சேவித்து நின்றதென்னுள்

தெளிதரு முத்தமிழ் தேய்நகை
வாசகச் செல்வி திணைத்
தெளிதரு முத்தமிழ் செவ்வே
ளிருப்பச் செவிகுனித்தே. (உரு)

செவிக்குன்ற வாரண நல்கிசை
பூட்டவன் சிந்தையம்பு
செவிக்குன்ற வாரண மஞ்சலென்
றுண்டது நீண்டகன்மச்
செவிக்குன்ற வாரண வேலா
யுதஞ்செற்ற துற்றனகட்
செவிக்குன்ற வாரண வள்ளிபொற்
றுண்மற்றென் றேடுவதே. (உசு)

தேடிக் கொடும்படை கைக்கூற்
றடாதுளஞ் சேவின்மைமீன்
தேடிக் கொடும்படை கோமான்
சிறைபட வேறுளபுத்
தேடிக் கொடும்படை யாவெகு
நாட்டன் சிறைகளையுந்
தேடிக் கொடும்படை மின்கேள்வ
னற்றுணை சிக்கெனவே. (உஎ)

சிக்குறத் தத்தை வழங்கா
திழந்து தியங்குவர்தே
சிக்குறத் தத்தை வடிவே
லெனுர்சில ரன்பர்செந்தாள்
சிக்குறத் தத்தை கடிந்தேனல்
காக்குஞ் சிறுமிகுறிஞ்
சிக்குறத் தத்தை யனகிலெப்
போதுந் திகழ்புயனே. (உஅ)

திகழு மலங்கற் கழல்பணி
வார்சொற் படிசெய்யவோ
திகழு மலங்கற் பகவூர்
செருத்தணி செப்பிவெண்பூ
திகழு மலங்கற் பருளுமென்
னுவமண் சேனையுபா
திகழு மலங்கற் குரைத்தோ
னலதில்லை தெய்வங்களே. (உக)

தெய்வ மணம்புணர் தீகால்
வெளிசெய்த தேவரைந்த
தெய்வ மணம்புண ராரிக்கு
மருக செச்சையந்தார்
தெய்வ மணம்புண ருங்குழ
லாளைத் தினைப்புனத்தே
தெய்வ மணம்புணர் கந்தனென்
னீருங்க டீதறவே. (ருo)

தீதா வசவ னுபவிக்க
மண்ணிலும் விண்ணிலுஞ்செந்
தீதா வசவ னியாயஞ்செய்
வேதிய ரேதியங்காத்
தீதா வசவ னிமலர்செல்
வாசாக் கிரவசத்த
தீதா வசவன் புறப்பா
ரெனுமுத்தி சித்திக்கவே. (ருக)

சித்திக்கத் தத்துவ ருத்திர
பாலக செச்சைகுறிஞ்
சித்திக்கத் தத்துவ ரத்தியின்
மாவென்ற சேவகவிச்

சித்திக்கத் தத்துவர் வாய்மொழி
மாதர்க் கெனுந்திணைவா
சித்திக்கத் தத்துவ ருத்தப்
படாதுநற் சேதனமே. (௩௨)

சேதனந் தந்துறை யென்றுமை
செப்புங் குருந்துறைகாற்
சேதனந் தந்துறை யல்லிமன்
வாவிச்செந் தூர்கருத
சேதனந் தந்துறை யென்றறி
யார்திற நீங்கிநெஞ்சே
சேதனந் தந்துறை மற்றுமுற்
றுடித் திரிகைவிட்டே. (௩௩)

திரிகையி லாயிர வெல்லாழி
மண்விண் டருசிரபாத்
திரிகையி லாயிர வானந்த
நாடகி சேரிமகோத்
திரிகையி லாயிர மிக்குமைந்
தாசெந்தி லாயொருகால்
திரிகையி லாயிரக் கோடிசுற்
றேடுந் திருத்துளமே. (௩௪)

திருத்துள வாரிகல் போதுடன்
சேண்மழை தூங்குஞ்சங்க
திருத்துள வாரிதி கண்டுயி
லாசெயன் மாண்டசிந்தை
திருத்துள வாரன்னை செந்தூரை
யன்னள்செம் மேனியென்பு
திருத்துள வார்சடை யீசர்மைந்
தாவினிச் செச்சைநல்கே. (௩௫)

செச்சைய வாவி கலயில்வல்
வாயிடைச் சேடனிற்கச்
செச்சைய வாவி பருகுஞ்
சிகாவல செங்கைவெந்தீ
செச்சைய வாவி விடுகெனுஞ்
செல்வநின் றருளாறுகச்
செச்சைய வாவி றுயிர்வாழ்
வினியலஞ் சீர்ப்பினுமே. (௩௬)

சீர்க்கை வனப்பு மலர்வேங்கை
யானவன் செஞ்சிலையோர்
சீர்க்கை வனப்பு னிதத்தவ
வேடன் றினைவளைக்குஞ்
சீர்க்கை வனப்பு னமதுருக்
காட்டிய சேய்தமிழ்நூற்
சீர்க்கை வனப்பு னிமிர்சடை
யோன்மகன் சிற்றடிக்கே. (௩௭)

சிற்றம் பலத்தை யரன்புநெய்
நூற்றிரி சிந்தையிடுஞ்
சிற்றம் பலத்தை வரஞான
தீபமிட் டார்க்குப்பரி
சிற்றம் பலத்தை யருளுஞ்செந்
தூரர் பகைக்குலமாஞ்
சிற்றம் பலத்தைப் பதவரந்
தோளிலிந் தீவரமே. (௩௮)

தீவர கந்தரி தாம்பகி
ராருற வானசெம்பொன்
தீவர கந்தரி யாநொந்த
போதினிற் செச்சையவிந்

தீவர கந்தரி சிந்துரை
பாக சிவகரணை
தீவர கந்த ரிபுதி
ருனதடி சேமநட்பே. (௩௯)

சேமர விக்கம் படையாக
வீசுப தேசமுன்னூற்
சேமர விக்கம் பலந்தரு
வாய்செரு வாயவெஞ்சூர்ச்
சேமர விக்கந் திரித்தாய்
வருத்திய வன்றிறென்றல்
சேமர விக்கம் புயவாளி
விண்டிரை தெண்டிரையே. (௪௦)

தெண்டன் புரந்தர வக்குன்றில்
வாழ்கந்த சிந்துவிலுத்
தெண்டன் புரந்தர லோகஞ்
செருந்துசெற் ரேய்களைவாய்
தெண்டன் புரந்தர நற்கேள்
சிறுவ ரழச்செய்தெம்மைத்
தெண்டன் புரந்தர வின்படி
நூக்கிய தீநரகே. (௪௧)

தீனந் தினத்து தரச்செல்வர்
பாற்சென் றெனக்கென்பதோர்
தீனந் தினத்து முதரா
னலஞ்சுடச் சேர்ந்துசுடுந்
தீனந் தினத்து னிகளைசெங்
கோட்டினன் செந்திலந்நீர்
தீனந் தினத்து தவத்துப்
பிரசதஞ் செய்யவற்றே. (௪௨)

செய்யசெந் தாமரை யில்லாத
மாதுடன் செந்திணைசூழ்
செய்யசெந் தாமரை மானூர்
சிலம்பிற் கலந்துறையுஞ்
செய்யசெந் தாமரை யென்னுங்
குமார சிறுசதங்கைச்
செய்யசெந் தாமரை சேர்வதென்
றோவினை சேய்தொலைத்தே. (சுஙு)

சேதாம் பலதுறை வேறும்
பணிகங்கை செல்வநந்தன்
சேதாம் பலதுறை யாதசிற்
றூயன் றிருமருக
சேதாம் பலதுறை செவ்வாய்க்
குறத்தி திறத்தமுத்திச்
சேதாம் பலதுறை யீதென்
றெனக்குப தேசநல்கே. (சுச)

தேசம் புகல வயிலேயெ
னச்சிறை புக்கொருகந்
தேசம் புகல வணவாரி
செற்றவ னீசற்குப
தேசம் புகல திகவாச
கன்சிறி தோர்கிலன்மாந்
தேசம் புகல கமுதவி
மானைச் செருச்செய்வதே. (சுரு)

செருக்கும் பராக வயிராவ
தத்தெய்வ யானைமணஞ்
செருக்கும் பராக தனந்தோய்
கடம்ப செகமதநூல்

செருக்கும் பராக மரிரு
 பனந்தந் தெளிவியம்பு
செருக்கும் பராகம் விடுங்கடை
 நாளுந் திடம்பெறவே. (சசு)

திடம்படு கத்துங்கெ டீர்கன்ம
 லோகச் சிலுக்குமச்சோ
திடம்படு கத்துந் திரித்தம்பு
 வாலியு ரத்தும்பத்துத்
திடம்படு கத்துந் தெறித்தான்
 மருக திருகுமும்ம
திடம்படு கத்துங் கநகங்
 குனித்தவன் சேயெனுமே. (சஎ)

சேயவன் புந்தி வனவாச
 மாதுடன் சேர்ந்தசெந்திற்
சேயவன் புந்தி கனிசா
 சராந்தக சேந்தவென்னிற்
சேயவன் புந்தி பணிப்பானு
 வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற
 வேதருஞ் சேதமின்றே. (சஅ)

சேதக மொன்று மனுதியுந்
 தாதையுந் தேடரியார்
சேதக மொன்றுஞ் சதங்கையங்
 கிண்கிணி செச்சையந்தாள்
சேதக மொன்றும் வகைபணி
 யாயினித் தீயவினைச்
சேதக மொன்று மறியா
 துழலுயிர்ச் சித்திரமே. (சக)

சித்திர மிக்கன வில்வாழ்
 வெனத்தெளி யுந்தவவா
சித்திர மிக்க னெறிக்கழிந்
 தேற்கினிச் செச்சைநல்வி
சித்திர மிக்க தனக்குறத்
 தோகை திறத்தமுத்தி
சித்திர மிக்க வருளாய்
 பிறவிச் சிகையறவே. (ரு௦)

சிகைத்தோகை மாமயில் வீரா
 சிலம்புஞ் சிலம்பம்புரா
சிகைத்தோகை மாமயில் வாங்கிப்
 பொருது திசைமுகன்வா
சிகைத்தோகை மாமயில் வானில்வைத்
 தோய்வெஞ் செருமகள்வா
சிகைத்தோகை மாமயில் செவ்விநற்
 கீரர்சொற் றித்தித்ததே. (ருக)

தித்திக்குந் தொந்திக்கு நித்தம்
 புரியுஞ் சிவன்செவிபத்
தித்திக்குந் தொந்திக் கறமொழி
 பாலக தேனலைத்துத்
தித்திக்குந் தொந்திக் கிளையாய்
 விளையுயிர்க் குஞ்சிதைதோல்
தித்திக்குந் தொந்திப் பனவேது
 செய்வினைத் தீவிலங்கே. (ருஉ)

தீவிலங் கங்கை தரித்தார்
 குமார திமிரமுந்நீர்
தீவிலங் கங்கை வருமான்
 மருக தெரிவற்றவான்

தீவிலங் கங்கை வரவா
விரைக்குத் திரிந்துழலுந்
தீவிலங் கங்கை யமன்றொட
ராமற் றிதம்பெறவே. (ருங)

திதத்தத்தத் தித்தத் திதிதாதை
தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்த திதித்தித்த
தேதுத்து தித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி
தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ
திதிதுதி தீதொத்ததே. (ருச)

தீதோ மரணந் தவிரும்
பிறப்பறுந் தீயகற்புந்
தீதோ மரணம் பரமீது
தானவர் சேனைமுற்றுந்
தீதோ மரணந் தனபூசு
ரர்திரண் டேத்தியமுத்
தீதோ மரண மலையாளி
யென்றுரை தென்னுறவே. (ருரு)

தென்ன வனங்கனஞ் சூழ்காத்
திரிநக சூலகரத்
தென்ன வனங்கனந் தப்பத
நீட்டினன் செல்வமுன்பின்
தென்ன வனங்கனன் னீற்றுற்
றிருத்திய தென்னவின்னந்
தென்ன வனங்கனங் கைச்சிலைக்
கூனையுந் தீர்த்தருளே. (ருசு)

தீத்தன் பரவை வெளிநீங்கிச்
சேய்தொழச் செல்பதவுத்
தீத்தன் பரவை முறையிட
மாங்குறை தீங்குறவே
தீத்தன் பரவை தழைக்கவிண்
காவெனச் சென்னியின்மேல்
தீத்தன் பரவையில் வேலத்த
னேகுரு சீலத்தனே. (ருஎ)

சீலங் கனமுற்ற பங்கா
கரசல தீரக்கநி
சீலங் கனமுற்ற முத்தூர்செந்
தூர சிகண்டியஞ்சு
சீலங் கனமுற்ற வேதனை
மேவித் தியங்கினஞ்சீ
சீலங் கனமுற்ற விப்பிறப்
பூடினிச் சேர்ப்பதன்றே. (ருஅ)

சேர்ப்பது மாலய நீலோற்
பலகிரித் தெய்வவள்ளி
சேர்ப்பது மாலய முற்று
ரெனப்பலர் செப்பவெப்புச்
சேர்ப்பது மாலய வத்தைமன்
யாக்கை சிதைவதன்முன்
சேர்ப்பது மாலய வாசவன்
செப்பிய செப்பதத்தே. (ருகூ)

செப்பத் தமதிலை மாற்றார்
கொளுமுன்னஞ் செல்வர்க்கிடச்
செப்பத் தமதிலை யெங்ஙனுய்
வார்தெய்வ வேழமுகன்

செப்பத் தமதிலை வாணுத
　　னேக்கினர் சேணில்வெள்ளிச்
செப்பத் தமதிலை வென்றூர்
　　குமாரவத் திக்கரசே. (சுய)

திக்கர சத்தி தவன்சென்று
　　முன்றி திருமரர்வந்
திக்கர சத்தி யிடத்தோ
　　யென்செய்வ தெனத்தருநீ
திக்கர சத்தி விதிர்த்திலை
　　யேலெவன் செய்குவரத்
திக்கர சத்தி யலைவாய்
　　வளர்சித் திலக்கொழுந்தே (சுக)

திலமுந் தயிலமு நிகர
　　வெங்குந் திகழ்தருசெந்
திலமுந் தயில முருகா
　　வெனுதத் திநகையினித்
திலமுந் தயிலமு தத்தா
　　லுருகிய சித்தவென்னே
திலமுந் தயில கலவினை
　　மேவித் தியங்குவதே. (சுஉ)

தியங்காப் பொறியுண் டெனுந்தனுத்
　　தீதலு மேதிலையயூர்
தியங்காப் பொறியுண் டவமிலி
　　யேயென்று செப்பலுஞ்சத்
தியங்காப் பொறியுண் டயன்கைப்
　　படாது திரவெற்புரி
தியங்காப் பொறியுண் டைபண்டுயப்
　　போர்செய்த சேவகனே. (சுந)

சேவக மன்ன மலர்க்கோமுன்
னீசொலத் தெய்வவள்ளி
சேவக மன்ன வதனும்
புயகிரி செற்றமுழுச்
சேவக மன்ன திருவாவி
னன்குடிச் செல்வகல்விச்
சேவக மன்ன முனிக்கெங்ங
ஞணித் திகைப்புற்றதே. (கூச)

திகைப்படங் கப்புயந் தந்தரு
ளானென் படிங்கணிய
திகைப்படங் கத்தமை யார்செந்தி
லாரென்ப டென்னனுய
திகைப்படங் கப்புகல் சேயென்பள்
கன்னிகண் ணீர்தரவி
திகைப்படங் கத்தமை யாதெமை
யாட்கொளுஞ் சீகரமே. (கூரு)

சீகர சிந்துர வுத்தவெஞ்
சூர செயபுயவ
சீகர சிந்துர வல்லிசிங்
கார சிவசுதசு
சீகர சிந்துர கந்தர
வாகன் சிறைவிடுஞ்சு
சீகர சிந்துர மால்வினைக்
குன்றைச் சிகண்டிகொண்டே. (கூகூ)

சிகண்டிதத் தத்த மரவாரி
விட்டத் திதிபுத்ரரா
சிகண்டிதத் தத்த நகபூ
தரதெய்வ வள்ளிக்கொடிச்

சிகண்டிதத் தத்த மலர்மேற்
குவித்திடை செப்புருவஞ்
சிகண்டிதத் தத்த கறபோ
பலமென்னுஞ் சேகரனே. (கூஎ)

சேகர வாரண வேல்வீர
வேடச் சிறுமிபத
சேகர வாரண மேவும்
புயாசல தீவினையின்
சேகர வாரண வெற்பாள
நாளுந் த்ரியம்பகனுர்
சேகர வாரண நின்கையில்
வாரணஞ் சிவனென்றே. (கூஅ)

சீவன சத்துரு கன்பாற்
பிறப்பறத் தேவருய்யச்
சீவன சத்துரு மிக்குமெய்
யோன்கையிற் சேர்த்தசெவ்வேள்
சீவன சத்துருச் செய்யாண்
மருகவெ னுதிடையே
சீவன சத்துரு வெய்தியெய்
தாப்பழி சிந்திப்பதே. (கூக)

சிந்துர வித்தக வாரும்
புகர்முகத் தெய்வவெள்ளைச்
சிந்துர வித்தக வல்லிசிங்
காரசெந் தூரகுன்றஞ்
சிந்துர வித்தக முத்திக்கு
மாய்நின்ற செல்வதுஞ்சா
சிந்துர வித்தக னம்போலு
மிங்கிளந் திங்களுமே. (எ०)

திங்களு மாசுண மும்புனை
வரர்செல்வ னென்னையிரு
திங்களு மாசுண மாக்கும்
பதாம்புயன் செந்திலன்ருள்
திங்களு மாசுண மன்போல்
விழியுஞ் செழுங்கரும்புந்
திங்களு மாசுண நன்ருன
மாற்றமுந் தீட்டினன்றே. (எக)

தீட்டப் படாவினி யுன்றலென்
சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் படாவி யவரல்லன்
யான்றிக்கு நான்மருப்புத்
தீட்டப் படாவி தமுகா
சலன்சிறை விட்டவன்ருள்
தீட்டப் படாவி வனையே
நினைவன் றிசாமுகனே. (எஉ)

திசாமுக வேதனை யன்பாற்
கரன்றிங் கடங்களவ
திசாமுக வேதனை யீறிலு
மீறிலர் சீறுமம்போ
திசாமுக வேதனை வென்கண்ட
வேலன் றினைப்புனத்தந்
திசாமுக வேதனை நண்ணுதண்
கார்வரை சேர்பவரே. (எங)

சேரப் பொருப்பட வித்தே
னிறைவன் றிரைசிறையைச்
சேரப் பொருப்பட வல்லவன்
சூரைச் சிகரியுடன்

சேரப் பொருப்பட வென்றண்ட
    ரேத்திய சேவகன்வான்
சேரப் பொருப்பட வேணியிற்
    சேர்த்தவன் செய்தவமே. (எச)

செய்தவத் தாலஞ்சு சீரேழுத்
    தோதிலந் தீதலருஞ்
செய்தவத் தாலஞ்சு கம்பெறச்
    சேயுரைக் கேற்றுருப்போய்ச்
செய்தவத் தாலஞ்சு வைக்கனி
    யீன்றதென் னேம்வினையே
செய்தவத் தாலஞ்சு கின்றன
    மும்மலச் செம்மல்கொண்டே. (எரு)

செம்மலை வண்டு கடரங்க
    மாவென்ற திண்படைவேற்
செம்மலை வண்டு வச்வார
    ணத்தனைச் செப்பவுன்னிச்
செம்மலை வண்டு தவந்தமிழ்ப்
    பாணதெண் டங்கையில்வாய்
செம்மலை வண்டு விருப்புறு
    மோவிது தேர்ந்துரையே. (எசு)

தேரை விடப்பணி யேறேறி
    முப்புரஞ் செற்றபிரான்
தேரை விடப்பணி சூராரி
    யென்க தெரிவையர்பால்
தேரை விடப்பணி வாய்ப்படு
    மாறு செறிந்தலகைத்
தேரை விடப்பணித் தென்றேடி
    யென்றுந் திரிபவரே. (எஎ)

திரிபுரத் தப்புப் புவிதரத்
தோன்றி சிலைபிடிப்பத்
திரிபுரத் தப்புத் தலைபட
நாண்டொடுஞ் சேவகன்கோத்
திரிபுரத் தப்புத் திரமான்
மருக திருக்கையம்போ
திரிபுரத் தப்புத் துறையா
யுதவெனச் செப்புநெஞ்சே. (எஅ)

செப்பா ரமுதலை மன்றோ
திகனங் குரும்பைமுலை
செப்பா ரமுதலை கண்கா
னைகமுருந் தீரிருகண்
செப்பா ரமுதலை வாவியிற்
சென்றபி ரான்மருகன்
செப்பா ரமுதலை வேர்களை
வான்வரைச் சீரிணுக்கே. (எகூ)

சீராம ராம சிவசங்க
ராநுந் திருமுடிக்குச்
சீராம ராம துகரத்
துழாயென்பர் தெண்டிரைமேற்
சீராம ராம னிறந்திறக்
கத்தொட்ட சேய்கழற்குச்
சீராம ராம னிமையோர்
மகுடச் சிகாவிம்பமே. (அ0)

சிகாவல வன்பரி தப்பாடு
செய்யுஞ்செவ் வேலவிலஞ்
சிகாவல வன்பரி லூரார்
மதனித் திலஞ்சலரா

சிகாவல வன்பரி யங்கங்
குழல்பெற்ற தேமொழிவஞ்
சிகாவல வன்பரி யானல
மன்றிலுந் தென்றலுமே. (அக)

தென்றலை யம்பு புனைவார்
குமார திமிரமுந்நீர்த்
தென்றலை யம்புய மின்கோ
மருக செழுமறைதேர்
தென்றலை யம்பு சகபூ
தரவெரி சிந்திமன்றல்
தென்றலை யம்பு படுநெறி
போயுயிர் தீர்க்கின்றதே. (அஉ)

தீரா கமல சலிகித
போக மெனத்தெளிந்துந்
தீரா கமல மெனக்கரு
தாதெதென் சேயவநூல்
தீரா கமல குகரம்
பொறுப்ப னெனத்திருக்கண்
தீரா கமல மரவே
கருகச் சிவந்தனனே. (அங)

சிவசிவ சங்கர வேலா
யுததினை வஞ்சிகுறிஞ்
சிவசிவ சங்கர வாமயில்
வீர செகந்திருக்கண்
சிவசிவ சங்கர மாவை
யெனுந்திற லோய்பொறைவா
சிவசிவ சங்கர மான்பட்ட
வாவொளி சேர்ந்தபின்னே. (அச)

சேந்த மராத்துடர் தானவர்
சேனையைத் தெண்டிரைக்கண்
சேந்த மராத்துடன் கொன்றசெவ்
வேல திருமுடிமேற்
சேந்த மராத்துட ரச்சூடி
மைந்த திளைத்திளைத்தேன்
சேந்த மராத்துட ரின்னுரி
யென்னுமிச் சேறுபுக்கே. (அ௫)

சேறலைத் தாறலைக் கப்பா
லெழுந்து செழுங்கமுகிற்
சேறலைத் தாறலைக் குஞ்செந்தி
லாய்சிந்தை திநெறியிற்
சேறலைத் தாறலைத் தீர்க்குங்
குமார திரியவினைச்
சேறலைத் தாறலைக் கத்தகு
மோமெய்த் திறங்கண்டுமே. (அ௬)

திறம்பா டுவர்தண் புனத்தெய்வ
மேயென்பர் சேதத்துமாந்
திறம்பா டுவர்முது நீரெனக்
காய்பவர் செந்தினைமேல்
திறம்பா டுவரிதழ் கண்டுரு
காநிற்பர் செப்புறச்செந்
திறம்பா டுவரி லிவர்வல்
லவர்நஞ் செயல்கொள்ளவே. (அ௭)

செயலங் கைவாளை யிறைகோயி
லைச்சிவ ஞரமுதைச்
செயலங் கைவாளை முனிகொண்டல்
வாளியைத் தேவர்பிரான்

செயலங் கைவாளை முனைவேலை
யன்னவிச் சேயுறையுஞ்
செயலங் கைவாளை யுகள்செந்தில்
வாழ்பவள் சேல்விழியே. (அஅ)

சேலையி லாருந் தவன்சூல
மேறச் சினத்தவன்கண்
சேலையி லாருந் திவளேற்
பவையர சிந்திரியச்
சேலையி லாரும் பராபரி
புக்குறச் சிக்கெனுமிச்
சேலையி லாருந் திறையிட்
டனர்தங்கள் சித்தங்களே. (அகூ)

சித்தத் தரங்கத்தர் சித்தியெய்
தத்திரி கின்றதென்னர்ச்
சித்தத் தரங்கத்தர் சந்ததி
யேசெந்தி லாய்சலரா
சித்தத் தரங்கத்த ரக்கரைச்
செற்றகந் தாதிங்களிஞ்
சித்தத் தரங்கத்தர் சேயா
ரணத்தந் திகிரியையே. (கூ௦)

திகிரி வலம்புரி மாற்கரி
யார்க்குப தேசஞ்சொன்ன
திகிரி வலம்புரி செய்யா
ரிலஞ்சிசெந் தூர்கனதந்
திகிரி வலம்புரி வேறும்
படைத்தருள் சேய்தணியில்
திகிரி வலம்புரி சூடிய
வாநன்று சேடியின்றே. (கூக)

சேடி வணங்கு வளைத்தோ
ளெனப்புணர் சேயவட
சேடி வணங்கு திருத்தணி
காவல நின்செருக்காற்
சேடி வணங்கு கொடியிடை
யாரையென் செப்புமுலை
சேடி வணங்கு தலைக்களி
றீந்தது செல்லலில்லே. (கூ௨)

செல்லலை யம்பொழில் சூழ்செந்தி
லானறி யானிறைகைச்
செல்லலை யம்பொழி லெங்கணு
மேற்ப வெனத்தெறித்த
செல்லலை யம்பொழி லங்கைக்
கருடிரு மானிறம்போற்
செல்லலை யம்பொழி லாகவ
மாதுயிர் சேதிப்பதே. (கூ௩)

சேதிக் கணைத்து களதாக்கு
நோக்கினன் செல்வசெந்திற்
சேதிக் கணைத்து நிலைபெறச்
சூரங்கஞ் சீரங்கமால்
சேதிக் கணைத்து வரிதோ
யயில்கொடெற் சேர்க்கவந்தாற்
சேதிக் கணைத்து வருமா
மறலி திறலினையே. (கூ௪)

திறவா வனக புரிவாச
னீக்கச் சிகரிநெஞ்சந்
திறவா வனச முனியைவெள
ரேய்தென் றிசைத்திருச்செந்

திறவா வனமயி லோயந்த
காலமென் சிந்தைவைக்கத்
திறவா வனின் றிருவான
தண்டைத் திருவடியே. (கரு)

திருக்கையம் போதிக ளோகஞ்ச
மோநஞ்ச மோதிருமால்
திருக்கையம் போசெய்ய வேலோ
விலோசனந் தென்னனங்கத்
திருக்கையம் போருகக் கைந்நீற்றின்
மாற்றித்தென் னூல்சிவபத்
திருக்கையம் போக வுரைத்தோன்
சிலம்பிற் சிறுமிதற்கே. (கசு)

சிறுமிக் குமர நிகர்வீர்
பகிரச் சிதையுயிர்த்துச்
சிறுமிக் குமர சரணமென்
னீருய்விர் செந்திலைமேற்
சிறுமிக் குமர புரைத்துநின்
றேன்சிலை வேட்டுவனெச்
சிறுமிக் குமர வணிமுடி
யான்மகன் சீரடிக்கே. (கஎ)

சீரங்க ராக மறமோது
திகிரி செங்கைகொண்ட
சீரங்க ராக மருகந்த
தேசிக செந்திலைமேற்
சீரங்க ராக தனகிரி
தோய்கந்த செந்தமிழ்நூற்
சீரங்க ராக விநோதவென்
பார்க்கில்லை தீவினையே. (கஅ)

தீவினை யற்ற சினந்தீ
ரகத்துண்மெய்த் தீபநந்தந்
தீவினை யற்ற வநந்தா
தெடுத்தனஞ் செந்தினைமேல்
தீவினை யற்ற புனமான்
கொழுநன் செழுங்கனகத்
தீவினை யற்ற வடியார்க்
கருள்பெருஞ் செல்வனுக்கே. (கக)

செல்வந் திகழு மலநெஞ்ச
மேயவன் றெய்வமின்னூர்
செல்வந் திகழு நமதின்மை
தீர்க்கும்வெங் கூற்றுவற்குச்
செல்வந் திகழுந் திருக்கையில்
வேறினை காத்தசெல்வி
செல்வந் திகழு மணவாள
னல்குந் திருவடியே. (ா)

கந்தரந்தாதி

முற்றிற்று

---

திருச்சிற்றம்பலம்

# திருவகுப்பு

## 1. சீர்பாதவகுப்பு

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன-தனதான தானதன

உததியிடை கடவுமர கதவருண குலதுரக
வுபலளித கனகரத-சதகோடி சூரியர்கள்

உதயமென வதிகவித கலபகக மயிலின்மிசை
யுகமுடிவி னிருளகல-வொருசோதி வீசுவதும்

உடலுமுட லுயிருநிலை பெறுதல்பொரு ளெனவுலக
மொருவிவரு மனுபவநல்-சிவயோக சாதனையில்

ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
யுணர்வுவிழி கொடுநியதி-தமதூடு நாடுவதும்

உருவெனவு மருவெனவு முளதெனவு மிலதெனவு
முழலுவன பரசமய-கலையார வாரமற

உரையவிழ வுணர்வவிழ வுளமவிழ வுயிரவிழ
வுளபடியை யுணருமவ-ரநுபூதி யானதுவும்

உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
வுருவுடைய மலினபவ-சலராசி யேறவிடும்

உறுபுணையு மறிமுகமு முயரமரர் மணிமுடியி
லுறைவதுவு முலைவிலது-மடியேன் மனோரதமும்;

இதழிவெகு முககசன நதியறுகு தறுகணர
விமகிரண தருணவுடு-பதிசேர்ச டாமவுலி
இறைமகிழ வுடைமணியொ டணிசகல மணிகலென
விமையமயி றமுவுமொரு-திருமார்பி லாடுவதும்
இமையவர்க ணகரிலிறை குடிபுகுத நிருதர்வயி
றெரிபுகுத வுரகர்பதி-யபிடேக மாயிரமும்
எழுபிலமு நெறுநெறென முறியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி-விளையாடல் கூறுவதும்
இனியகனி கடலைபய றொடியல்பொரி யமுதுசெயு
மிலகுவெகு கடவிகட-தடபார மேருவுடன்
இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
வெழுபுவியை யொருநொடியில்-வலமாக வோடுவதும்
எறுழிபுலி கரடியரி கரிகடமை வருடையுழை
யிரலைமரை யிரவுபக-லிரைதேர்க டாடவியில்
எயினரிடு மிதணதனி லிளகுதினை கிளிகடிய
வினிதுபயில் சிறுமிவளர்-புனமீது லாவுவதும்;
முதலவினை முடிவிலரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல-வருகால தூதர்கெட
முடுகுவது மருணெறியி லுதவுவது நினையுமவை
முடியவரு வதுமடியர்-பகைகோடி சாடுவதும்
மொகுமொகென மதுபமுரல் குரவுவிள வினதுகுறு
முறியுமலர் வகுளதள-முழுநீல தீவரமும்
முருகுகமழ் வதுமகில முதன்மைதரு வதும்விரத
முனிவர்கரு தரியதவ-முயல்வார்த பேரபலமும்
முருகசர வணமகளி ரறுவர்முலை நுகருமறு
முககுமர சரணமென-வருள்பாடி யாடிமிக

மொழிகுழற வழுதுதொழு துருகுமவர் விழியருவி
முழுகுவதும் வருகவென-வறைகூவி யாளுவதும்

முடியவழி வழியடிமை யெனுமுரிமை யடிமைமுழு
துலகறிய மழலைமொழி-கொடுபாடு மாசுகவி

முதலமொழி வனநிபுண மதுபமுக ரிதமவுன
முகுளபரி மளநிகில-கவிமாலை சூடுவதும்;

மதசிகரி கதறிமுது முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு-விசையாதி மூலமென

வருகருணை வரதனிக விரணியனை நுதியுகிரின்
வகிருமட லரிவடிவு-குறளாகி மாபலியை

வலியசிறை யிடவெளியின் முகடுகிழி படமுடிய
வளருமுகி னிருதனிரு-பதுவாகு பூதரமும்

மகுடமொரு பதுமுறிய வடுபகழி விடுகுரிசின்
மருகனிசி சரர்தளமும்-வருதாரகாசுரனும்

மடியமலை பிளவுபட மகரசல நிதிகுறுகி
மருகிமுறை யிடமுனியும்-வடிவேல னீலகிரி

மருவுகுரு பதியுவதி பவதிபக வதிமதுர
வசனிபயி ரவிகவுரி-யுமையாள்த்ரி சூலதரி

வனசைமது பதியமலை விசயைதிரி புரைபுனிதை
வனிதையபி நவையனகை-யபிராம நாயகிதன்

மதலைமலை கிழவனநு பவனபய னுபயசதுர்
மறையின்முத னடுமுடிவின்-மணநாறு சீறடியே. (க)

## 2. தேவேந்திர சங்கவகுப்பு

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன
தானந்தன தந்தன தானந்தன தந்தன

தரணியி லரணிய முரணிர ணியனுட
றனைநக நுதிகொடு
சாடோங்குநெ டுங்கிரி யோடேந்துப யங்கரி

தமருக பரிபுர வொலிகொடு நடநவில்
சரணிய சதுர்மறை
தாதாம்புய மந்திர வேதாந்தப ரம்பரை

சரிவளை விரிசடை யெரிபுரை வடிவினள்
சததள முகுளித
தாமாங்குச மென்றிரு தாளாந்தர வம்பிகை

தருபதி சுரரொடு சருவிய வசுரர்க
டடமணி முடிபொடி
தாளும்படி செங்கையில் வாள்வாங்கிய சங்கரி ;

இரணகி ரணமட மயின்மிர்க மதபுள
கிதவிள முலையிள
நீர்தாங்கிநு டங்கிய நூல்போன்றம ருங்கினள்

இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபட
ரெனதுயிர் கொளவரின் [குயில்
யானேங்குதல் கண்டெதிர் தானேன்றுகொ ளுங்

இடுபலி கொடுதிரி யிரவல ரிடர்கெட
விடுமன கரதல
வேகாம்பரை யிந்திரை மோகாங்கசு மங்கலை

எழுதிய படமென விருளறு சுடரடி
யிணைதொழு மவுனிக
ளேகாந்தசு கந்தரு பாசாங்குச சுந்தரி ;

கரணமு மரணமு மலமொடு முடல்படு
கடுவினை கெடநினை
காலாந்தரி கந்தரி நீலாஞ்சனி நஞ்சுமிழ்

கனலெரி கணபண குணமணி யணிபணி
கனவளை மரகத
காசாம்பர கஞ்சுளி தூசாம்படி கொண்டவள்

கனைகழ னினையல ருயிரவி பயிரவி
கவுரிக மலைகுழை
காதார்ந்தசெ ழுங்கழு நீர்தோய்ந்தபெ ருந்திரு

கரைபொழி திருமுக கருணையி லுலகெழு
கடனிலை பெறவளர்
காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன்;

அரவணைடு வடவரை யடியொடு பொடிபட
வலைகடல் கெடவயில்
வேல்வாங்கிய செந்தமிழ் நூலோன்கும ரன்குகன்

அறுமுக னொருபதொ டிருபுய னபிநவ
னழகிய குறமக
டார்வேய்ந்தபு யன்பகை யாமாந்தர்க ளந்தகன்

அடன்மிகு கடதட விகடித மதகளி
றனவர தமுமக
லாமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில்

அதிபதி யெனவரு பொருதிறன் முருகனை
யருள்பட மொழிபவ
ராராய்ந்துவ ணங்குவர் தேவேந்திர சங்கமே. (க)

## 3. வேல்வகுப்பு

தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தான

பருத்தமுலை சிறுத்தவிடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தவிதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும்

பனைக்கைமுக படக்கரட மதத்தவள
கசக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும்

பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு
கவிப்புலவ னிசைக்குருகி வரைக்குகையை
யிடித்துவழி காணும்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுத
லொழித்தவுண ருரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கவரு ணேரும் ;

சுரர்க்குமுனி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்குமரி தனக்குநரர் தமக்குமுறு
மிடுக்கண்வினை சாடும்

சுடர்ப்பரிதி யொளிப்பநில வொழுக்குமதி
யொளிப்பவலை யடக்குதழ லொளிப்பவொளி
ரொளிப்பிரபை வீசும்

துதிக்குமடி யவர்க்கொருவர் கெடுக்கவிடர்
நினைக்கினவர் குலத்தைமுத லறக்களையு
மெனக்கோர்துணை யாகும்

சொலற்கரிய திருப்புகழை யுரைத்தவரை
யடுத்தபகை யறுத்தெறிய வுறுக்கியெழு
மறத்தைநிலை காணும் ;

தருக்கிநமன் முருக்கவரி னெருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தவிறை
கழற்குநிக ராகும்

தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும்

தனித்துவழி நடக்குமென திடத்துமொரு
வலத்துமிரு புறத்துமரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும்

சலத்துவரு மரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும் ;

திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடைய முடைப்படையை வடைத்துதிர
நிறைத்துவிளை யாடும்

திசைக்கிரியை முதற்குலிச னறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கவற
விசைத்ததிர வோடும்

சினத்தவுண ரெதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும்

திருத்தணியி லுதித்தருளு மொருத்தன்மலை
விருத்தனென துளத்திலுறை கருத்தன்மயி
னடத்துகுகன் வேலே. (க)

## 4. திருவேளைக்காரன்வகுப்பு

தானதன தத்ததன தானதன தத்ததன
தானதன தத்ததன-தானத் தானன

ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பத்தசன-வாரக் காரனும்

ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
ணுருடனு ணக்கைபரி-தீமைக் காரனும்
ஆகமம்வி ளைத்தகில லோகமு நொடிப்பளவி
லாசையொடு சுற்றுமதி-வேகக் காரனும்
ஆணவவ முக்கடையு மாவியை விளக்கியனு
பூதியடை வித்ததொரு-பார்வைக் காரனும்
ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கவம
ராவதிபு ரக்குமட-லாண்மைக் காரனும்
ஆடகவி சித்ரகன கோபுரமு கப்பிலரு
ணுபுரியி னிற்குமடை-யாளக் காரனும்
ஆயிரமு கத்துநதி பாலனும கத்தடிமை
யானவர்தொ டுத்தகவி-மாலைக் காரனும்
ஆறுமுக வித்தகனு மாறிருபு யத்தரசு
மாதிமுடி வற்றதிரு-நாமக் காரனும்;
யானெனதெ னச்சருவு மீனசம யத்தெவரும்
யாருமுணர் தற்கரிய-நேர்மைக் காரனும்
யாதுநிலை யற்றலையு மேழுபிற விக்கடலை
யேறவிடு நற்கருணை-யோடக் காரனும்
ஏரகமி டைக்கழிசி ராமலைதி ருப்பழனி
யேரணிசெ ருத்தணியில்-வாசக் காரனும்
ஏழையினி ரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருணி-யாயக் காரனும்
யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாயெனவ ழைத்துருகு-நேயக் காரனும்
ஏதமற நிச்சயம னோலயவி ளக்கொளியும்
யாகமுநி வர்க்குரிய-காவற் காரனும்

சரிரும ருப்புடைய சோணைமத வெற்பிவரும்
யானையள விற்றுவளு-மாசைக் காரனும்

ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்குமிளை
யோனுமறி விற்பெரிய-மேன்மைக் காரனும்;

வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியிலு தித்தமுக-மாயக் காரனும்

வாரணப திக்குதவு நாரணனு வக்குமரு
மானுமய னைக்கறுவு-கோபக் காரனும்

வாழியென நித்தமற வாதுபர விற்சரண
வாரிசம ளிக்குமுப-காரக் காரனும்

மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவு-ளாயக் காரனும்

வாளெயிற துற்றபகு வாய்தொறுநெ ருப்புமிழும்
வாசுகியெ டுத்துதறும்-வாசிக் காரனும்

வாளகிரி யைத்தனது தாளிலிடி யப்பொருது
வாகைபுனை குக்குடப-தாகைக் காரனும்

மாசிலுயி ருக்குயிரு மாசிலுணர் வுக்குணர்வும்
வானிலனு வுக்கணுவு-பாயக் காரனும்

வாதனைத விர்த்தகுரு நாதனும்வெ ளிப்படம
காடவியி னிற்பதொர்ச-காயக் காரனும்;

மீனவனு மிக்கபுல வோருமுறை பொற்பலகை
மீதமர்த மிழ்த்ரயவி-னோதக் காரனும்

வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு-கேள்விக் காரனும்

வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி-வேலைக் காரனும்

மீனுலவு கிர்த்திகைகு மாரனுநி னைக்குமவர்
வீடுபெற வைத்தருளு-தாரக் காரனும்

மேனையரி வைக்குரிய பேரனும தித்ததிறல்
வீரனும ரக்கர்குல-சூறைக் காரனும்

வேதியர்வெ றுக்கையும நாதிபர வத்துவும்வி
சாகனும்வி கற்பவெகு-ரூபக் காரனும்

வேடுவர்பு னத்திலுரு மாறிமுனி சொற்படிவி
யாகுலம னத்தினொடு-போம்விற் காரனும்

மேவியபு னத்திதணி லோவியமெ னத்திகழு
மேதகுகு றத்திதிரு-வேளைக் காரனே. (க)

## 5. பெருத்தவசனவகுப்பு

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன

அருக்க னுலவிய சகத்ர யமுமிசை
யதிற்கொள் சுவையென வனைத்து நிறைவதும்

அவத்தை பலவையு மடக்கி யகிலமு
மவிழ்ச்சி பெறவினி திருக்கு மவுனமும்

அசட்டு வெறுவழி வழக்க ரறுவரு
மரற்று வனபொருள் விகற்ப மொழிவதும்

அழுக்கு மலவிருண் முழுக்கி னுழல்வதை
யடக்கி யவநெறி கடக்க விடுவதும்;

எருக்கு மிதழியு முடிக்கு மிறைகுரு
வெமக்கு மிறையவ னெனத்தி கழுவதும்

இரட்டை வினைகொடு திரட்டு மலவுட
லிணக்க மறவொரு கணக்கை யருள்வதும்

இருக்கு முதலிய சமத்த கலைகளு
　　மிதற்கி தெதிரென விளைக்க வரியதும்
இறக்க வெனவெதிர் நடக்கும் யமபடர்
　　கடக்க விடுவதொ ரியற்கை யருள்வதும்;
நெருக்கு வனவுப நிடத்தி னிறுதிக
　　ணிரப்பு கடையினி லிருப்பை யுடையதும்
நெருப்பு நிலம்வெளி மருத்து வனமென
　　நிறைத்த நெறிமுறை கரக்கு முருவமும்
நினைப்பு நினைவது நினைப்ப வனுமறு
　　நிலத்தி னிலைபெற நிறுத்த வுரியதும்
நிலைத்த வடியவர் மலைத்த லதுகெட
　　நிவிர்த்தி யுறவனு பவிக்கு நிதியமும்;
உருக்கு திருவரு டிளைத்து மகிழ்தர
　　வுளத்தொ டுரைசெய வொளித்து விடுவதும்
ஒளிக்கு மொளியென வெளிக்கும் வெளியென
　　வுயிர்க்கு முயிரென நிகழ்ச்சி தருவதும்
உரத்த தனிமயி லுகைத்து நிசிசர
　　ரொளிக்க வமர்பொரு சமர்த்த னணிதழை
உடுத்த குறமகண் மணக்கு மறுமுக
　　னுருத்த னருளிய பெருத்த வசனமே. (க)

## 6. பூதவேதாளவகுப்பு

தனன தனதன தனன தனதன
　　தனன தனதன தனன தனதன
தனத னதன தந்தன தந்தன
　　தனத னதன தந்தன தந்தன

தத்ததன தானதன தத்ததா னத்தனன
தத்ததன தானதன தத்ததா னத்தனன

தந்தத் தந்தனத் தான தாந்தன
தந்தத் தந்தனத் தான தாந்தன

தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தத்தன தத்தன

தானதன தந்ததன தானதன தந்ததன
தானதன தந்ததன தானதன தந்ததன

தனதன தனந்தனந் தந்தான தத்ததன
தனதன தனந்தனந் தந்தான தத்ததன

தனதனன தானதன தத்தனன தத்தனன
தனதனன தானதன தத்தனன தத்தனன

தனதன தத்த தனத்தன தத்த தானன
தனதன தத்த தனத்தன தத்த தானன

தானனு தான தனுதன தந்தன
தானனு தான தனுதன தந்தன

அருண கணபண புயக சுடுகையி
னகில புவனமு முதவு மலைமகள்

அமலை யாரியை யந்தரி சுந்தரி
யிமய மாமயி லம்பைத்ரி யம்பகி

அச்சுதச கோதரிய னைத்துவே தத்தலைவி
யற்புதபு ராதனிவ ரப்ரகா சப்ரக்ருதி

அம்பொற் குண்டலப் பேதை சாம்பவி
விம்பக் கிஞ்சுகப் பூவை பூங்கொடி

அக்ஷர லக்ஷஜ பத்தர்க்ர மத்திடு
சக்ரத லத்தித்ரி யக்ஷிச டக்ஷரி

ஆயிதிரு மைந்தன்முக மாயிரம்வி ளங்கியதொ
ராறுதர வந்தருளு மாறுமுக புண்டரிகன்

அருவரை திறந்துவன் சுங்க்ராம கற்கிமுகி
யபயமிட வஞ்சலென் றங்கீர னுக்குதவி

அரசறிய வாமனமு னிக்கொருத மிழ்த்ரயமு
மபரிமித மாகவிவ ரித்தகட வுட்புலவன்

அனுபவ சித்த பவக்கட லிற்பு காதெனை
வினவியெ டுத்தருள் வைத்த கழற்க்ரு பாகரன்

ஆசிலாசார தபோதன ரின்புறும்
வாசகாதீத மனோலய பஞ்சரன்

அகரு ம்ருகமத களப பரிமள
விகட முகபட கடின புளகித

அமிர்த பூதரி யண்டர்செ ழுங்கொடி
குமுத வாய்மயில் குஞ்சரி மஞ்சரி

அக்கமொரு கோடிபெறு வஜ்ரபா ணிக்குமரி
தக்கவம ராவதிபு ரக்குமா னைக்கிறைவன்

ஐம்பத் தொன்றிலெட் டாறின் மூன்றினி
லைந்திற் றங்குமப் பாலை வான்பொருள்

அப்படி பத்திப முத்தம னத்தின
ரர்ச்சனை மெச்சிய செச்சை மணிப்புயன்

ஆறுநிலை யென்றுமுத லாகியப ரங்கிரியு
மாவின னெடுங்குடியு மாரண முடிந்திடமும்

அருணையு மிலஞ்சியுஞ் செந்தூர்தி ருப்பழனி
யடியர்மன பங்கயஞ் செங்கோடி டைக்கழியும்

அனவரத நீலமலர் முத்தெறிசு னைப்புனலி [மெனும்
லருவிகுதி பாய்தருசெ ருத்தணியென் வெற்பு

அலகில்தி ருப்பதி யிற்பயில் கற்ப காடவி
யனுபவ னத்தனி ருத்தன ரத்த வாடையன்

ஆறுமா மாதர் பயோதர பந்தியி
லாரவே பாலமு தாருநெ டுந்தகை;

வருண சரவண மடுவில் வருமொரு
மதலை மறைகமழ் குதலை மொழியினன்

மதுக ராரவ மந்திர சிந்துர
மணம ருதக டம்புபு னைந்தவன்

மட்டொழுகு சாரமது ரித்ததே னைப்பருக
மர்க்கடச மூகமமை தொட்டிரு லெட்டுவரை

மன்றற் பைம்புனத் தாள்ப தாம்புயம்
வந்திக் குந்தனிக் காம வாஞ்சையன்

மத்தமு டித்தரு ளத்தர்ப்ரி யப்பட
நித்தம றைப்பொரு ளைத்தெளி வித்தவன்

மாதிரமு மந்தரமு நீருநில னுங்கனக
மால்வரையு டன்சுழல வாசுகிவி டம்பொழிய

மகரச லிலங்கடைந் திந்த்ராதி யர்க்கமுது
பகிர்தரு முகுந்தன்மன் பஞ்சாயு தக்கடவுள்

மருகன்மற வாதவர்நி னைப்பவைமு டிக்குமவ
னுருகுமடி யாரிருவி னைத்தொகைய றுக்குமவன்

மறவர்பொ ருப்பி லொருத்திபொ ருட்ட நாளிள
வடிவமு மூக்க நரைத்தவி ருத்த வேதியன்

மாதரா ரூப னிராகுல சிந்தைய
னுதிகூ தாள மதாணிய லங்க்ருதன்

வரத விதரண விரத வனுபவ
மவுன குருபர னிபுண குணதரன்

வனஜ ஜாதனை யன்றுமு னிந்தற
வலிய பாரவி லங்கிடு புங்கவன்

மட்டிலிரு நாலுதிசை கட்டுநே மிக்கிரியு
முத்தரகு ணதிகுட தக்ஷிண திக்கிரியும்

மங்கத் துங்கவிட் டேறு வாங்கிய
செங்கைப் பங்கயச் சோதி காங்கெயன்

மத்தம லத்ரய மித்தைத விர்த்தருள்
சுத்தப வித்ரநி வர்த்திய ளிப்பவன்

வாரணமு கன்றனது தாதையைவ லஞ்சுழல
வாகைமயில் கொண்டுலகு சூழ்நொடிவ ருங்குமரன்

மயமுறு ப்ரபஞ்சமுஞ் சங்கேத சட்சமய
வழியும னமுங்கடந் தெங்கேனு நிற்குமவன்

மதுரமொழி யாலுலக னைத்தையுமு ணர்த்துமவன்
வடவனல நேர்கொடிய குக்குடமு யர்த்தகுகன்

மரகத பக்ஷ குலத்துர கத்தி வாகரர்
வடிவையு ருக்கி வடித்தநி ருக்கை வேல்கொடு

வாரிகோ கோவென வாய்விட வந்தெதிர்
சூரமா சேனையை மோதுக ளந்தனில்;

உருவ மிருளெழ வெயிறு நிலவெழ
வுலகு வெருவர வசைய வருவன

உடைய நாயகி கண்டும கிழ்ந்திட
நடைவி னோதவி தம்புரி பந்திய

ஒக்கலைவி டாதழுத ரற்றுபா லர்க்குமிக
வுச்சிவெடி யாதுநிண மெத்தபே தப்புவன

உங்குக் கிங்குவிட் டாழி நான்கினு
மொன்றுக் கொன்றடி பாய்தல் காண்பன

யுத்தக ளத்தினில் ரத்நம ணிக்குவை
யொட்டமொ டொற்றையி ரட்டைபி டிப்பன

யோகினிக ளும்பெரிய சாகினிக ளும்புதிய
மோகினிக ளும்பழைய டாகினிக ளும்புகழ

உவண நிறை கொண்டிடுஞ் செங்காவ ணத்திடையி
லு றவுகொள வந்துதம் பெண்காறை கட்டுவன

உமிழ்குருதி யாறடைப டக்குறட டுக்கியதி
லுபவனமொ ரேழையுமு றித்தருகொ ழுக்குவன

உடுபட லத்தை மறைத்தகு றைக்கு வாலுட
லுதிரச முத்திர முற்று நிலைப்ப டாதன

ஓடைமால் வார ணயூகம டங்கலு
மோரொர்பேய் நீள்க டைவாயில டங்குவ

உடலி னிசிசரர் மவுலி யொலியலு
முதடு மலைவன பதடி முலையின

உததி யேழும டங்கவு றிஞ்சியு
முதர வாரமு னின்றுகொ ளுந்துவ

உக்கிரவி ராவணனெ டுத்தமே ருக்கிரியு
மொற்றியிரு தோள்கொடுப றித்திடா தப்புவன

ஒன்றித் திண்குரற் கூகை பாம்பொடு
வென்றிச் செந்தலைத் தாலி பூண்பன

ஒக்கமி டற்றிலி றக்குகு றைத்தலை
விக்கிவெ ளுக்கவெ ளுக்கவி ழிப்பன

யோகுபுரி யுங்குகையும் யோகபர ரும்பொருவ
வோடைமத தந்திவயி றாடினிது றங்குவன

உசிதபி சிதங்கொணர்ந் திங்கேற விற்றுமென
மதமலையெ லும்புகொண் டங்காடி கட்டுவன

உதிரங்ஙண வாள்பெருக வொட்டுவன வெட்டுவன்
வுடலினடு வூடுருவ முட்டுவன தட்டுவன

ஒழுகுபி ணத்துங்ங ணத்தின ளற்றி லேபழு
வொடியவு முக்கிவ மூக்கி யுருட்டி வீழ்வன

ஊசலார் வார்கு ழையோலையி டும்படி
யோதுசா மீகர நேமிபி டுங்குவ ;

கரண மிடுவன குணலை யிடுவன
கழையை நடுவன பவுரி வருவன

ககன கூடமு டைந்துவி ழும்படி
கதறி வாயனல் கண்கனல் சிந்துவ

கைச்சதியி ஞுமுறைவி தித்தவா முற்கடித
கச்சபுட சாசபுட சட்பிதா புத்திரிக

கண்டச் சம்பதிப் பேத மாம்பல
கஞ்சப் பஞ்சகத் தாள மாம்படி

கற்சரி யுற்சவ தர்ப்பண லக்ஷண
சச்சரி மட்டிசை யொற்றிய றுப்பன

காயெரிய பங்கியொடு சேகரமி குந்தசைவ
காதுபடு சங்கவள மாலிகைபு னைந்திசைவ

கருணைய திகந்துவந் தொண்கோகு லப்பெரிய
கருமுடியொ டும்படுங் கங்காள மொத்துவன

கடிபயிர வாதிகள்ப்ரி யப்படுக திக்கிசைய
நடைநவிலு பாவனை யுதிக்குநட வித்தையின

கடகம டுத்த விடக்கைவ லக்கை வாளின
கருதிய லக்ஷிய லக்ஷண முற்று மோதுவ

காலமா ருத வராளிசி கண்டிகை
பாலசீ காம ரமானவி பஞ்சிகை

